


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை


# ஆறாவது அகில இந்தியக் கைத்தறி வாரம்

**ஆறாவது அகில இந்தியக் கைத்தறி வாரம் 1959 பிப்ரவரி 8-ந் தேதி முதல் 15-ந் தேதி வரை நாடெங்கும் கொண்டாடப்படுவதையொட்டி, ராஷ்டிரபதி, உப-ராஷ்டிரபதி, பிரதம மந்திரி, யூனியன் மந்திரிகள், ராஜ்ய முதல் மந்திரிகள் ஆகியோர் வாழ்த்துச் செய்திகளை அனுப்பியிருக்கிறார்கள்.**

## ராஜேந்திரபிரசாத்

"6-வது அகில இந்தியக் கைத்தறி வாரத்தை நாம் கொண்டாடும் சந்தர்ப்பத்தில், அகில இந்தியக் கைத்தறி போர்டு கைத்தறித் துணிகளை இந்தியாவில் மட்டுமின்றி சில வெளிதேச மார்க்கெட்டுகளிலும் பிரபலப்படுத்துவதில் அடைந்துள்ள படிப்படியான முன்னேற்றம் பற்றிக் குறிப்பிட்டு நான் அதைப் பாராட்ட விரும்புகிறேன்.

"இந்தக் கைத்தறித் தொழில் உற்பத்தியைப் பெருக்க முடிந்திருப்பதைக் குறித்தும், முந்திய வருஷங்களைவிட நடை முதல் வருஷத்தில் பொதுப்பட சிறந்த பலன்களை காட்ட முடிந்திருப்பதைக் குறித்தும் நாம் மிகவும் திருப்தியடையலாம்.

இப்போது கொண்டாடப்படவிருக்கிற கைத்தறி வாரம் அகில இந்தியக் கைத்தறி போர்டின் நோக்கங்களும் லட்சியங்களும் இன்னும் அதிக வெற்றிகரமாக நிறைவேறுவதற்கு வழிசெய்யும் என்று நான் நம்புகிறேன். அந்தப் போர்டுக்கு இந்த சந்தர்ப்பத்தில் என் நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## ராதாகிருஷ்ணன்

நீங்கள் மீண்டும் அகில இந்தியக் கைத்தறி வாரம் கொண்டாட விருப்பதை அறிந்து நான் மகிழ்ச்சியடைகிறேன். தரம் நன்றாக இருக்கவேண்டுமென்று நாம் வற்புறுத்தி வந்தால் நம் கைத்தறித் தொழில் நம் வேலைத் திறமைக்கு மிகச்சிறந்த விளம்பரமாக அமையும்; அதே சமயத்தில் அந்நியச் செலாவணியையும் தேடித்தரும். எனவே, நீங்கள் தரம் உயர்வதற்கு உங்களால் ஆனமட்டிலும் முயல்வீர்கள் என்று நான் நம்புகிறேன்.

## நேருஜி

பிரதம மந்திரி, ஸ்ரீ ஜவஹர்லால் நேரு அனுப்பியுள்ள வாழ்த்துச் செய்தியில் இந்த வாரம் வெற்றிகரமாக நடக்கவேண்டுமென்று நல் வாழ்த்துக்களைத் தெரிவித்திருக்கிறார்.

## மொரார்ஜி தேசாய்

கைத்தறித் தொழில் துணிகளின் தரத்திலும் பேட்டு வகைகளிலும் குறிப்பிடத்தக்க முறையில் அபிவிருத்தியடைந்திருப்பதைக் காண எனக்கு மிக்க மகிழ்ச்சியேற்படுகிறது; எதிர்காலத்தில் தனிச்சிறப்புள்ள துணிகளைத் தயாரிப்பதில் அது தொடர்ந்து முயர்சி செய்து வரும் என்று நான் நம்புகிறேன்.

## லால்பகதூர் சாஸ்திரி

6-வது அகில இந்தியக் கைத்தறி வாரம் கொண்டாடப்படும் இச்சந்தர்ப்பத்தில் நான் இச்செய்தியை மிக்க மகிழ்ச்யோடு அனுப்புகிறேன். கைத்தறித் தொழிலாவது நேரிடையாகவும், சார்பு ரீதியாகவும் நாடெங்கிலும் வியாபித்திருக்கிற லட்சக்கணக்கான மக்களுக்கு ஜீவனோபாயத்தைத் தருகிறது.

கைத்தறி தொழிலின் வரலாறு காவிய, இதிகாச காலங்களிலிருந்தே ஆரம்பிக்கிறது. அதன் நீண்ட காலச்சரித்திரத்தில் அத்தொழில் பலவித வாழ்வு தாழ்வுகளை அடைந்திருக்கிறது. அது உயிர் தப்பி வாழ்வதற்குச் செய்துள்ள போராட்டத்தைக் கவனித்தால் அதன் உள்ளீடான வலுவும், ஜீவசக்தியும் நிதர்சனமாகத் தெரியும். சர்க்கார் அதற்கு அளித்துள்ள ஆதரவானது கண்டிப்பான பொருளாதார பிரத்யட்ச நிலைமைகளை அடிப்படையாகக் கொண்டதாகும்: கிராமாந்தரத்தில் உள்ள மக்களுக்கு அவர்கள் வீடுகளிலேயே வேலை வாய்ப்பை அளிக்கவேண்டியதன் அவசியமும் அதற்கு அடிப்படையாக இருந்திருக்கிறது.

நூல் துணிகளுக்கு உள்ள போட்டி ஓரளவு கடுமையாகவே இருக்கிறது. இத்தொழில் மேலும் முன்னேறிச் செழிப்புற வேண்டுமானால் உபயோகிப்பவர்களின் விருப்பத்தை ஈர்க்கக்கூடிய முறையில் அது புதிய வேலை முறைகளை உருவாக்க வேண்டுவது அவசியமாகும். புதிய பேட்டுகள், பரவலாகப் பிரிந்து அமைகிற நெசவுத் தொழிலில் புதிய வேலை முறைகள் ஆகியவை அவசரத் தேவையாகும். நெசவாளர்கள் மேலும் மேலும் அதிக அளவில் கூட்டுறவு அடிப்படையில் ஸ்தாபன ரீதியில் அமைக்கப்பட வேண்டும். இந்த ஏற்பாடுகள் எல்லாம் படிப்படையாக கையாளப்பட்டால் கைத்தறித் தொழில் அதன் எதிர்காலத்தை நம்பிக்கையோடு முன்னோக்கி நிற்கலாம் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

"கைத்தறி வாரத்துக்கு எல்லா விதத்திலும் வெற்றி கிடைக்க நான் வாழ்த்துக் கூறுகிறேன்."

## கே. காமராஜ்

சமீப வருஷங்களில் அகில இந்தியக் கைத்தறி வாரம் கொண்டாடப்படுவது மனதுக்கு ஊக்கம் தரும் அம்சமாகும்; அது நெசவாளரின் நலன்களைக் கவனிப்பதற்காக மிக விஸ்தாரமான ஸ்தாபன ஏற்பாடு இருந்து வேலை செய்வதை நெசவாளர் உணரும்படி செய்கிறது. கைத்தறி நெசவானது இந்தியாவில் வெறும் தொழிலாக அபிவிருத்தியடைந்ததைவிட ஒரு கலைத் துறையாக அபிவிருத்தியடைந்திருக்கிறது என்று சொல்லாம்; எனவே, அதை வெறும் தொழில் என்ற முறையில் மாத்திரம் நாம் மதிப்பிடுவோமானால் அதனால் நமக்குத்தான் நஷ்டம். ஆகையால் துணிமணிச் சரக்குகளை வாங்கும் பொது மக்கள் தராதர நுட்பம் தெரிந்து கைத்தறித் துணிக்கு ஆதரவு அளிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்; அதன் மூலம் நெசவாளர் ஒரு கலைஞன் என்ற முறையில் தம் திறமையைக்காட்டி நம் வாழ்க்கையை மேலும் தொடர்ந்து வளமுறச் செய்யும்படி பார்த்துக் கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்".

## என். சஞ்சீவி ரெட்டி

பம்பாய் அகில இந்தியக் கைத்தறி போர்டு 1959 பிப்ரவரி மாதத்தில் ஆறாவது அகில இந்தியக் கைத்தறி வாரத்தைக் கொண்டாடுவதையறிந்து நான் மகிழ்ச்சி

(10-ம் பக்கம் பார்க்க)

15—2—1959

# நமது தேசீய சாதனைகள்

## விஞ்ஞான தொழில் நுட்பக் கல்வி

ஒரு தேசத்தின் சுபிட்சமானது கல்வி மூலம் பிரதானமாய் ஏற்படுவதாகும். கல்வித்துறையில் முன்னேறியுள்ள நாடுகள் அனேகமாய் சுபிட்சமுள்ள நாடுகளாகவே இருக்கின்றன; கல்வித் துறையில் பின்னடைந்த நாடுகள் ஏராளமான இயற்கை வளம் இருந்தாலும்கூட, ஏழ்மை நாடுகளாகவே இருக்கின்றன.

நவீன காலத்தில் தேச சுபிட்சம் ஏற்படுவதற்கு முக்கியமான அம்சம் மூன்று விஷயங்கள் ஒருப்போல சேர்ந்திருக்கும் சூழ்நிலையாகும்; மக்களின் உணர்ச்சி ஆர்வம் ஒருபுறமிருக்க, அதோடுகூட தொழில்நுட்பம், மூலப்பொருள்கள், மூலதனம் ஆகிய மூன்றும் ஒன்று சேர வேண்டும். அவைகளில் முதல் அம்சம் மற்றவைகளை விட முக்கியமானது; ஏனென்றால் புதிய வேலை முறைகளைக் கண்டுபிடிப்பதும், கையாளுவதும் இயற்கை வள ஆதாரக் குறையை ஈடுகட்டி மூலதனத் தேவையைக் குறைக்கும்.

எனவே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உத்தேசிக்கப்பட்டுள்ள தொழில்துறை அபிவிருத்தியானது விஞ்ஞான தொழில்நுட்பக் கல்வி போதனைக்கு நாட்டிலுள்ள வசதிகளைத் துரிதமாக விஸ்தரிக்கும் திட்டத்தை ஒரு அங்கமாக கொண்டிருக்கிறது.

தொழில்நுட்பச் சிப்பந்திகள் என்னும் சொற்றொடர் விஸ்தாரமான பிரயோகமுள்ளது; அதில் விசேஷ தேர்ச்சியுள்ள விஞ்ஞானிகள், தொழில்நுட்பச் சிப்பந்திகள் எஞ்சினீயர்கள் ஆகியோர் அடங்கியிருப்பதோடு கூட, பல்வேறு அந்தஸ்துள்ள தொழில்நுட்ப கைவினைஞர்களும், வேலையாளர்களும் அடங்கியிருப்பார்கள். பல்வேறு அந்தஸ்திலுள்ள சிப்பந்திகள் எல்லாரும் அவசியம்தான் என்பதையும் முக்கியத்துவம் வாய்ந்தவர்கள்தான் என்பதையும், எந்த ஒரு ஸ்தாபனத்திலாவது அவர்களில் பற்றாக்குறை இருந்தால் தேசத்தின் பொருளாதாரம் மொத்தத்திலும் தீமை பயக்கும் விளைவுகள் ஏற்படுமென்பதையும் உணர வேண்டும். நமது பிரபல விஞ்ஞானிகள், தொழில்நுட்ப நிபுணர்கள், எஞ்சினீயர்கள் ஆகியோர் உலகத்தில் உள்ள மிகச் சிறந்தவர்களுக்குச் சமமானவர்கள்தான். அதேபோல், நமது சாதாரண ஊழியரும் பிற தேசத்தொழிலாளியைப் போல் சமமான திறமையுள்ளவர்கள்தான்.

அதிகத் தொழிலபிவிருத்தியுள்ள மேனாடுகளுடன் நாம் போட்டிபோட வேண்டுமானால், இந்தியத் தொழில்களின் அமைப்பு முறை மாத்திரமன்றி, அதன் வேலை வாய்ப்பு முறையும் மாறியாகவேண்டும். எஞ்சினீயர்களும் தொழில்நுட்ப நிபுணர்களும் இப்போதேகூட அதிகமாய்த் தேவைப்படுகிறார்கள் என்கிறபோதிலும், இந்தியத் தொழில் துறையினர் இதுவரை விஞ்ஞானிகளைப் பெருமளவில் அவ்வளவாக உபயோகித்துக் கொள்ளவில்லை.

ஹிட்லர் காலத்துக்கு முந்திய காலத்தில் ஜெர்மன் தொழில் துறைதான் உலகம் முழுவதிலுமே ஏராளமான விஞ்ஞானிகளை வேலையில் ஈடுபடுத்தியுள்ள துறையாக இருந்தது. அமெரிக்கத் தொழில்துறை பற்றிய ஓர் அறிக்கையிலிருந்து, 1954-ல் தனியார் தொழில்துறையில் ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட விஞ்ஞானிகள் ஈடுபடுத்தப்பட்டிருந்தார்கள் என்பது தெரிய வருகிறது. அதாவது, தனியார் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டிருந்த விஞ்ஞானிகளின் எண்ணிக்கை சர்க்கார் ஸ்தாபனங்கள், கல்லூரிகள், சர்வகலாசாலைகள் ஆகிய எல்லா துறைகளிலும் அமர்த்தப்பட்டுள்ள விஞ்ஞானிகளின் எண்ணிக்கையைவிட இது அதிகம். இந்தியத் தொழில் துறை உலகத்தின் இதர நாட்டு தொழில் துறைகளுடன் அதற்குரிய சரியான ஸ்தானத்தை அடையவேண்டுமானால் ஒவ்வொரு துறையிலும், பிரிவிலும் விஞ்ஞான ஆராய்ச்சி ஊழியர்கள் இன்னும் அதிக அளவில் அமர்த்தப்படவேண்டும்.

இந்தியாவில் தொழில் நுட்ப ஆள்பலப் பிரச்னையில் எண்ணிக்கை அளவு, தரம், உள்ள சிப்பந்திகளைச் சரியானபடி பயன்படுத்துவது ஆகிய அம்சங்கள் எல்லாம் அடங்கியிருக்கின்றன. எண்ணிக்கையிலுள்ள பற்றாக்குறையைப் பரிகரிப்பதற்கு சகல ஸ்தானங்களிலும் தொழில்நுட்பக்கல்வியை எவ்வளவு துரிதமாக முடியுமோ அவ்வளவு துரிதமாக அவ்வசதிகள் விஸ்தரிக்கப்பட்டு வருகின்றன. அதற்கு செகண்டரி பள்ளிக்கூட கட்டத்திலேயே வேலை ஆரம்பிக்கவேண்டும். பிறகு பாலிடெக்னிக், கல்லூரி, சர்வகலாசாலை உயர்தரக்கல்வி நிலையங்கள் ஆகிய ஸ்தானங்கள் வரை அதை விரிவுபடுத்தவேண்டும்.

தரம் சம்பந்தமான பிரச்னையும் முக்கியமானதாகும். பொதுவாகக் கல்வித் தரம் குறைந்துவருகிறதென்று ஓர் உணர்ச்சி இருந்தபோதிலும்கூட, தொழில் நுட்பக் கல்வி நிலையங்கள் விஷயத்தில் நிலைமை எந்தவித கவலையையும் அளிக்கத் தேவையில்லை. எண்ணிக்கை அதிகரிப்பு காரணமாய் தனிப்பட்ட மாணவர்கள் விஷயத்தில் செலுத்தப்படும் கவனம்சற்று குறைந்தபோதிலும், ஏராளமான மாணவர்கள் இந்நிலையங்களில் சேர மனு செய்வதால் தகுதி மிக்கவர்களைத் தெரிந்தெடுக்க நல்ல வாய்ப்பு இருக்கிறது; எனவே ஆரம்பத்தில் சேரும் மாணவர்கள் முன்னிருந்ததைவிட நல்ல திறமையுள்ளவர்களாக இருக்கிறார்கள்.

சுதந்திரத்திற்கு முன் எஞ்சினீயரிங் தொழில்நுட்பத்துறையில் பட்ட பிற்கால படிப்புக்கு வசதி அளிக்கும் நிலையம் ஒன்றுகூட இருந்ததில்லை என்று சொல்லலாம். ஆனால், இப்போது கரக்பூர் இந்தியத் தொழில்நுட்ப ஆராய்ச்சி நிலையம் எஞ்சினீயர்கள், தொழில்நுட்ப நிபுணர்கள் ஆகியோர் விஷயத்தில் மிக உன்னத பயிற்சிக்கும் வசதியளிக்கிறது. மற்றொரு உயர்தரத் தொழில் நுட்பக் கல்வி நிலையம் பம்பாயில் 1958 ஜூலை முதல் இயங்க ஆரம்பித்துவிட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதிக்குள் மேலும் இரண்டு நிலையங்கள் ஏற்படுத்தப்படும். பெங்களூர் இந்திய விஞ்ஞானக் கழகமும், தொழில்நுட்பத் துறைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கத் தொடங்கிவிட்டது. ஆசியாவிலேயே மிகச் சிறந்த இத்தகைய நிலையமாக அது விளங்குகிறது. இந்தியா சுதந்திரமடைந்த பிறகு ஏற்பட்ட முக்கியமான சாதனைகளில் அது ஒன்றாகும்.

பல்வேறு துறைகளிலும் தொழில்நுட்பச் சிப்பந்திகளை சப்ளை செய்வது வரவர அதிகரித்துவருகிறது. பயிற்சியின் தரமும்

(9-ம் பக்கம் பார்க்க)

# கைத்தறிப் பொருள்களின் அபிவிருத்தி

— என். பி. சுகேர்க்கர்.

கைத்தறிப் பொருள்களுக்கு விளம்பரமே தேவையில்லாத காலமும் ஒன்று இருந்தது. இந்தியாவில் பல்லாயிரக்கணக்கான கைத்தறிகள் வேலை செய்து, அன்றாட உபயோகத் துணிமணிகளிலிருந்து, அற்புதமான கண்ணைக் கவரும் கலை வேலைப்பாடமைந்த உயர்ந்தரகத் துணிகள் வரையுள்ள பல்வேறு ரக ஜவுளிகளைத் தயாரிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தன. அந்தக் காலத்தில் நெசவாளர்கள் பொதுஜன ஆதரவையும் மன்னர்கள் ஆட்சியாளர்கள் ஆகியோரின் ஆதரவையும் பெற்றிருந்தனர்.

இந்தியாவின் ஒவ்வொரு பிராந்தியத்திலும் ஒவ்வொரு வகையான நெசவுக் கலை மரபு உருவாகியிருந்தது.

அந்த ஜவுளி ரகங்களின் புகழ் நமது தேசத்தின் எல்லைகளைக் கடந்து சென்று இதர கண்டங்களிலுள்ள நாடுகளிலும் பரவியிருந்தது; அப்பொருள்களின் தர நேர்த்தியில் கவர்ச்சி கொண்ட வெளி நாட்டினர் ஏராளமான பேர் அவைகளை வாங்கிச் செல்வதற்காக இந்தியாவுக்கு வந்தார்கள்.

கி. மு. 5000-ம் வருஷத்துக்கு முன்பே இந்திய ஜவுளிகளின் கீர்த்தி வெளிநாடுகளில் பரவியிருந்ததற்கான ஆதாரங்கள் இருக்கின்றன; கி. மு. 5000-ம் வருஷத்தில் எகிப்திய "மம்மி" களுக்கு (பத்திரமாகக் காப்பாற்றப்பட்ட மன்னர்களின் சடலங்களுக்குப்) போர்த்தப்படுவதற்காக இந்தியாவிலிருந்து கொண்டு செல்லப்பட்ட நேர்த்தியான மஸ்லின் துணிகள் உபயோகிக்கப்பட்டன. ஹெரோடோட்டஸ், மெகஸ்தனீஸ், பிளினி ஆகியோர் போன்ற கிரேக்கர்களாலும், "எரித்ரீன் கடலின் பெரிபிளஸ்" என்னும் நூலின் ஆசிரியராலும் நமது ஜவுளி வகைகள் பெரிதும் பாராட்டப்பட்டுள்ளன.

மெகஸ்தனீஸ் இந்திய ஜவுளிகள் பற்றிப் பின்வருமாறு கூறியிருக்கிறார்: "இந்தியர்களுடைய உடைகள் தங்கத்தால் இழைக்கப்பட்டவையாகும்; அவை ரத்தினங்கள் பதித்து அலங்காரம் செய்யப்பட்டவை; நுண்ணிய மஸ்லினுல் செய்யப்பட்ட மென் தளிர் போன்ற உடைகளும் இருக்கின்றன." 13-வது நூற்றாண்டில் இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்த இத்தாலியரான மார்க்கோ போலோ தெலுங்கு நாட்டின் மஸ்லின் துணிகள் பற்றிக் குறிப்பிடுகையில், அவை மிக மிக மிருதுவான சருமம் போல் மெத்தென்றிருக்கும்; அவைகளை அணிய ஆசைப்படாத அரசனோ அல்லது ராணியோ இருக்க முடியாது என்று கூறியிருக்கிறார்.

17-வது நூற்றாண்டில் இந்தியாவுக்கு விஜயம் செய்த பிரெஞ்சுக் கலா ரசிகர் ஒருவர் ஒரே கைப்பிடிக்குள் அடங்கிவிடக்கூடிய 60 முழம் நீளமுள்ள ஒரு தலைப்பாகைத் துணி பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். 15 கஜ நீளமுள்ள உயர்தரமான மஸ்லின் துணியின் எடை 900 கிராம்தான் இருக்கும். டாக்கா மஸ்லின் போன்ற சில ரகங்கள் மிகமிக நேர்த்தியானவை ஆகும்; டாக்கா மஸ்லின் "ஓடும் தண்ணீர்" என்றும், "நெய்யப்பட்ட காற்று" என்றும், "மாலைப் பனித்துளி" என்றும் பலவாறாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

நாட்டின் துணித் தேவைகளைப் பூர்த்தி செய்வது விஷயத்திலும், உலகமெங்கிலுமுள்ள ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்த செல்வந்தர்களின் உயர்ந்தரகத் தேவைகளைப் பூர்த்தி செய்வது விஷயத்திலும் கைத்தறிப் பொருள்கள் ஏகபோக உரிமை வகித்துவந்த காலத்தில், நெசவாளர்கள் உன்னதக் கலைஞர்களின் ஸ்தானத்தை வகித்து வந்தார்கள்; அப்போது அவர்களுடைய பொருள்களுக்கு விளம்பரமே தேவைப் படவில்லை. ஆனால், விசைத்தறிகளும், ஆலைகளும் வந்து குறைந்த விலையில் அமோக அளவில் துணி உற்பத்தி செய்யப்பட்டபின் கைத்தறிகள் அவைகளுடன் போட்டி போட முடியாமல் தங்களுடைய ஏகபோக உரிமையை இழக்க ஆரம்பித்தன. விசைத்தறித்துறை கைத்தறித் துறையின் பெரும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டது. விசைத் தறிகளுடன் போட்டி போட முடியாமல் கைத்தறிகள் பின்னடைய ஆரம்பித்தன. ஆயினும் விசைத்தறிகள் கைத்தறித் தொழிலை ஒரேயடியாய் ஒழித்து விட முடியவில்லை.

பரம்பரை பரம்பரையாகக் கைவேலைத் திறமை பெற்றுவந்துள்ள நெசவாளி தன்னுடைய தொழிலில் விடாப்பிடியாக ஒட்டிக் கொண்டிருக்கிறார். அவர் இன்று உயிரோடு ஜீவிப்பதற்கு அவருடைய கைவேலைத் திறமையும், ஆக்க வேலைத் திறமையும், தமது மூதாதையர்களின் கீர்த்தியை நிலைநாட்டி, மேலும் புகழ்தேட வேண்டுமென்ற அவாவும்தான் பிரதான காரணங்களாகும்.

கைத்தறித் தொழிலானது எந்த ஒரு பிராந்தியத்திலும் மாத்திரம் குவிந்திருக்கவில்லை. ஒவ்வொரு பிராந்தியத்திலும் ஒவ்வொரு வகையான கைத்தறி மரபு அபிவிருத்தி யடைந்திருக்கிறது. அந்த மரபுகள் காப்பாற்றப்பட்டிருப்பதோடு அபிவிருத்தியடையவும் செய்யப்பட்டிருக்கின்றன.

கைத்தறித் தொழிலை இணைப்பான ரீதியில் சீரமைப்பதற்கான முயற்சிகளில் ஈடுபட்டுள்ள அகில இந்தியக் கைத்தறி போர்டு, நாடெங்கிலும் வியாபித்துள்ள இத்தொழிலுக்குத் தீவிர விளம்பரம் அளிக்கப்படவேண்டியது அவசியம் என்பதை உணர்ந்து, சகல விதமான விளம்பர சாதனங்களையும் அதற்கு உபயோகப்படுத்துவதற்கான திட்டமொன்றை வகுத்தது.

பத்திரிகைகள், சஞ்சிகைகள், ஆகியவைகளில் விளம்பரம் செய்வது, கண்காட்சிகள், சினிமா ஸ்லைடுகள், "நியான்" விளக்குகள் முதலியவை மூலமாக விளம்பரப்படுத்துவது முதலிய ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. முக்கியமான நகரங்களில் காட்சி அறைகளும், காட்சிப் பெட்டிகளும் ஏற்படுத்தப்பட்டன. பல ராஜ்ய கூட்டுறவு டெப்போக்கள் ஏற்படுத்துவதற்காக அகில இந்திய கைத்தறி போர்டு செஸ் நிதியிலிருந்து நிதியுதவி அளித்தது.

பிரதானமாய் அகில இந்திய கைத்தறி போர்டின் முயற்சி காரணமாய், 1953-ல் அகில இந்திய கைத்தறி ஜவுளி விற்பனைக் கூட்டுறவு சங்கம் ஏற்படுத்தப்பட்டது. அந்த சங்கம் சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய நகரங்களில் கைத்தறி விற்பனை நிலையங்களை (ஹாண்ட்லூம் ஹவுஸ்) ஏற்படுத்தியிருக்கிறது. அந்நிலையங்களில் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் உற்பத்தி செய்யப்படுகிற கைத்தறிப் பொருள்கள் விற்பனை செய்யப்படுகின்றன. அவை கைத்தறிப் பொருள்களை விற்பனை செய்வதற்கான சிறந்த ஸ்தாபனங்களாக விளங்குவதோடு மட்டுமின்றி, மிகப் பெரிய விளம்பர ஸ்தாபனங்களாகவும் விளங்குகின்றன. நாட்டில் ஏற்பாடு செய்யப்படுகிற பெரிய கண்காட்சிகளிலும் அகில இந்திய கைத்தறி போர்டு பங்கெடுத்து வருகிறது.

மேற்காசிய, கிழக்காசிய நாடுகளில் நமக்குப் பரம்பரையாக இருந்துவருகிற மார்க்கெட்டுகளை இழந்துவிடாமல் பார்த்துக்கொள்ளும் பொருட்டு, அகில இந்திய கைத்தறி போர்டால் தயாரிக்கப்பட்ட திட்டமொன்று மத்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கிற நிதியுதவியுடன் சென்னை ராஜ்ய கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவு சங்கத்தால் நிறைவேற்றி வைக்கப்பட்டு வருகிறது. சென்னை ராஜ்ய கூட்டுறவு சங்கம் சிங்கப்பூர், பாங்காக், கொழும்பு, ஏடன், கோலாலம்பூர் ஆகிய இடங்களில் விற்பனை நிலையங்களை ஏற்படுத்த நடவடிக்கை எடுத்திருக்கிறது.

இந்தியக் கைத்தறிப் பொருள்கள் பற்றி விளம்பரம் செய்து ஆர்டர்கள் வாங்குவதற்காக, பொருத்தமான ஸ்தலங்களில் சுற்றுப் பிரயாணம் செய்யும் விற்பனையாளர்களையும் அந்த சங்கம் நியமித்திருக்கிறது.

எல்லா வெளி நாடுகளிலும் நமது வர்த்தகக் கமிஷன்கள் மூலமாகவும் தீவிர விளம்பர ஏற்பாடுகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. வெளிநாடுகளில் நடத்தப்படுகிற

(10-ம் பக்கம் பார்க்க)

# பல நூற்றாண்டுகளுக்கு ஒரு முறை தோன்றும் மகான்

நம் காலத்தில் மட்டுமின்றி உலக வரலாற்றிலேயே தோன்றிய மகான்களில் ஒருவர் மகாத்மா காந்தி.

மகிமை என்பது எமாற்றிவிடக் கூடிய தன்மை யுடைத்ததாக இருக்கிறது. எனெனில் பல போர்களில் பிரமாத வெற்றியடைந்த ஒரு யுத்தவீரன் அடுத்த நூற்றாண்டில் அடியோடு மறக்கப்பட்டு விடுகிறான். ஒரு முனிவர் அல்லது துறவி தமது ஜீவிய காலத்தில் யாருக்கும் தெரியாதவராக இருந்து விடுவதும் பிற்காலத் தலைமுறையினர் அவரைப் போற்றி வழிபடுவதும் கண்கூடு. ஆனால் காந்திஜியின் மகிமை அவருடைய வாழ்நாளிலேயே மிகப் பரவலாக உணரப்பட்டதுடன் குன்றாமலும் இருக்கிறது. உண்மையில் அது வளரக்கூடியதாகவும் இருக்கிறது!

இருபதாவது நூற்றாண்டின் முற் பகுதியில் அவர் வாழ்ந்தார். இக் காலத்தில்தான், எடிஸன், போர்ட், மார்க்கோனி போன்ற விஞ்ஞான மேதைகளும், புதுமைகளைக் கண்டு பிடித்தவர்களும், லெனின், ஹிட்லர், ஸ்டாலின் போன்ற ஆட்சியாளர்களும் வாழ்ந்தனர். சர்ச்சில், ரூஸ்வெல்ட் போன்ற ராஜதந்திரிகளுக்கும் ஐன்ஸ்டின், ஸ்க்வீட்ஸர் போன்ற சிந்தனையாளர்களுக்கும் இருந்த கௌரவமும் மதிப்பும் காந்திஜிக்கு இருந்தன. ஆயினும் இந்த சகாப்தத்தின் வரலாறு எழுதப்படுகையில், காந்திஜி நமது தலைமுறையின் மாபெரும் மேதாவிகளில் ஒருவராக கருதப்படுவார்.

பல நூற்றாண்டுகளுக்கு ஒரு முறை தோன்றும் மகானாகத் திகழ்கிறார் காந்திஜி. கீழ்த்திசை பண்பாட்டின் ஜோதி அவர்.

கீழ்த்திசை நாடுகளில் கோடிக் கணக்கான மக்கள் காந்திஜியை வணங்கினர். மேற்கு நாடுகளில் அவர் கீர்த்தி பிரசித்தமாக இருந்தது. அவர் மிகவும் போற்றப்பட்டார். பிரிட்டிஷ்சிங்கத்தின் வாலை முறுக்குவதில் வெற்றி கண்டவர். நாலு முழத் துணியணிந்த, பொன்நிற மேனியுடைய மெலிந்த மனிதர் என்று பொதுவாக அவர் கருதப்பட்டிருக்கலாம்.

காந்திஜி பிற்கால சந்ததியினருக்கு விட்டுச் சென்றுள்ளவை அனந்தம். அவர் விட்டுச் சென்றது சொத்துக்கள் அல்ல. ஒரு அசாதாரண வாழ்க்கை முறையும் ஊடுருவிப் பார்க்கும் தார்மிக நுண்ணறிவுமாகும். பல உலகத் தலைவர்களின் வாழ்க்கைமுறை வேறு, போதித்து வந்த தத்துவங்கள் வேறு என்ற நிலையில் வைத்து இதைப் பார்க்கையில் இது ஒரு தர்ம சங்கடமான மாறுபாடு என்றே கூறலாம்.

மகாத்மாவைப் பொறுத்த மட்டில் அவருடைய வாழ்க்கையும் போதனைகளும் ஒன்றே. அவருடைய செய்திக்குச் சிறந்த விளக்கமாக இருப்பது அவருடைய சுய சரிதையாகும்.

"ராஜத்துரோகப் பக்கிரி" என்று காந்திஜியை ஒரு சமயத்தில் வின்ஸ்டன் சர்ச்சில் இகழ்ச்சியாகக் கூறினார். இப்பொழுது இக் கூற்றை யாரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். அதுமட்டுமல்ல மகாத்மா முக்கியமாக ஒரு முனிவரா அரசியல்வாதியா என்பதிலும் பலரிடையே கருத்து வேற்றுமைகள் உண்டு. "அரசியல்வாதியாக இருக்க முயற்சிக்கும் ஒரு முனிவர் என்று என்னை மக்கள் வருணிக்கின்றனர், ஆனால் உண்மை இதற்கு நேர் மாறாகும்" என்று காந்தியே கூறியிருக்கிறார். அவர் பயிற்சி பெற்றது சட்டக் கல்வியில். மதத்திலோ அல்லது வேதாந்தத்திலோ அல்ல. ஆயினும் அவருக்கு மதத்திலிருந்த பற்றுதல் அபாரம். உண்மையான சமய வாழ்க்கையையே அவர் நடத்தி வந்தார். அவர் இதில் வெற்றி கண்டார். ஒரு சிலருக்குத்தான் இத்தகைய வெற்றி கிட்டியுள்ளது. அது மட்டுமல்ல தீமையை எதிர்க்கும் பிரச்னைக்கு சமயப்பூர்வமான ஒரு புதிய முறையையும் வகுத்தவர் மகாத்மா தான். எனினும், அவர் ஒரு அரசியல் வாதியுமாவார். அவர் அனுஷ்டித்த மதம் யாவரும் எளிதில் பின்பற்றக்கூடியது. தென் ஆப்பிரிக்காவிலும் சரி, இந்தியாவிலும் சரி — அவருடைய முயற்சிகள் முழுக்க முழுக்க அரசியல் சம்பந்தமானவையே. இதில் ஐயமில்லை. காந்திஜியின் வாழ்க்கை முழுவதும் தமது மக்களை சுதந்திரத்திற்காகத் தயார் செய்வதற்கும், பிறகு சுதந்திரம்பெற உதவி செய்வதற்குமே அர்ப்பணம் செய்யப்பட்டிருந்தது.

சுதந்திரத்திற்கு இந்திய மக்களைத் தயார் செய்ய காந்திஜியின் பொறுமை மிக்க முயற்சிகள் "நிர்மாணத் திட்டம்" என்று அழைக்கப்பட்டு வந்துள்ளன. உள்நாட்டில் பலவித சீர்திருத்தங்களைப் பற்றியது இது. அவருடைய நிர்மாணத்திட்டத்தின் வேறு சில அம்சங்கள் உலக முக்கியத்துவம் கொண்டவையாக இருந்தன.

ஹிந்து, கிறிஸ்தவ சமய நூல்களின் உதவியுடனும் ஹென்றி டி. தோரோவியோ, டால்ஸ்டாய் போன்ற பேரறிஞர்களின் வழியைப் பின்பற்றியும் மகாத்மா ஒரு புதிய போராட்ட முறையை வகுத்தார். இனவெறி, எகாதிபத்திய வெறி, போர், போன்ற தீமைகள் மிகக் கொடிய விளைவுகளையும் எதிர்க்க இந்த முறையை ஒரு சிறிய கோஷ்டியோ அல்லது ஒரு பெரிய கோஷ்டியோ அல்லது ஒரு தேசம் பூராவுமோ கையாளக் கூடியதாக இருந்தது. 'சத்யாக்ரகம்' என்ற வார்த்தையை சிருஷ்டித்தவர் காந்திஜியே. இச்சொல் "சாத்வீக எதிர்ப்பு", சட்ட மறுப்பு, என்ற பதங்களைவிடத் திருப்திகரமாக இருந்தது அவருக்கு. சத்யாக்ரக முறையை வகுத்தவரும் அவரே. முதலில் தென் ஆப்பிரிக்காவிலும் பிறகு இந்தியாவிலும், நீண்ட கால அனு

(10-ம் பக்கம் பார்க்க)

# குழந்தைகளும் பெற்றோரும்

— பாரதன்.

அன்புள்ள பாப்பா;

இது உனக்கு எழுதும் மூன்றாவது கடிதம். முதற் கடிதத்தில் குழந்தைகளுக்கென்றே முதன் முதலில் எளிமையும் இனிமையுமான பாடல்கள் எழுதிய மாபெரும் கவிஞர் பாரதியாரைப் பற்றியும் அவருடைய பாப்பா பாட்டைப் படித்து நீ கற்றுக் கொள்ள வேண்டிய நீதிகளைப் பற்றியும் எழுதியிருந்தேன். இரண்டாவது கடிதத்தில் நல்ல அறிவைப் பெற்றுள்ள விஞ்ஞானிகள் எழுத்தாளர்கள் போல் நிலையான தொண்டுசெய்ய முடியாத இழி நிலையை எடுத்துக் கூறியும், விஞ்ஞானிகளின் அழிவுப் பாதையிலிருந்து விலகி, ஆக்க வேலைகளுக்குப் பயன்படவேண்டும் என்றும் எழுத்தாளர்களின் நல்ல நூல்களைப்படித்து, நீ உன்னைத் திருத்திக்கொள்ளவேண்டும் என்றும் எழுதியிருந்தேன். இந்த மூன்றாவது கடிதத்தில் உன்னுடைய அறிவு வளர்ச்சிக்குப் பாதகமாக இருப்போர்களைப்பற்றி எழுதப்போகிறேன்.

உலகத்தில் எப்போதுமே எவரும் தானாகத் தவறுசெய்வதில்லை. மற்றவர்களைப் பார்த்துத்தான் தவறு செய்யக் கற்றுக்கொள்கிறார்கள். அப்படி நமக்குத் தவறு செய்யக் கற்றுக்கொடுப்போரும் வேறு யாருமல்ல; நமது அம்மா அப்பா, நமக்குவேண்டியவர்கள் தான்! விரோதிகள் அல்ல! ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? படித்துப்பார் புரியும்!

உனது தெருவிலோ, உனது ஊரிலோ அதிக வயதான ஒருவர் மிகவும் நல்லவராக இருந்தால் அவரைப்பற்றி ஊரில் உள்ள ஜனங்கள் என்ன சொல்கிறார்கள் என்று கவனித்துக் கேட்டுப்பார்!

"அடடா! அவர் தங்கமானவர்! கள்ளங்கபடமறியாத குழந்தை உள்ளம் படைத்தவர்" என்று பாராட்டுகிறார்கள். அப்படியானால் என்ன பொருள்? குழந்தை உள்ளம் என்றால் கள்ளங்கபடமில்லாத மனம், பொய், பொறாமை, கோபம், வெறுப்பு எதுவும் அறியாத மனம் என்று தானே பொருள்?

ஆனால், அதே வயதுள்ள மற்றொருவர் முன்கோபக்காரராக — திருடராக — பொய் சொல்பவராக இருந்தால் அவரைப்பற்றி என்ன சொல்கிறோம்?

அவன் முன் கோபக்காரன் — திருடன் — பொய்யன் என்று கூறுகிறோம்.

முன்னவரும் குழந்தையாக இருந்து வளர்ந்து வந்தவர்தான். பின்னவரும் குழந்தையாகஇருந்து வந்தவர்தான்! இருவரும் குழந்தை உள்ளம் உடையவர்களாக இருந்து வந்தவர்கள்தான்! அப்படியிருக்க, முன்னவர் புகழ்ச்சிக்கும் பின்னவர் இகழ்ச்சிக்கும் உள்ளானது ஏன்?

விடை இதுதான்! அந்த இரு பெரியவர்களின் பெற்றோர் வளர்த்த முறையிலும், அவர்களிடம் பழகியவர்களிடையே உள்ள குணத்திலும் வேறுபாடு உள்ளது!

உனக்கு இப்போது பத்து வயது ஆகிறது. நான் நம்புகிறேன்: இந்த வயதிலும் உனக்குத் திருடுவதுபற்றியோ, பொய் சொல்லுவதுபற்றியோ, கோபம் கொள்வதுபற்றியோ ஒன்றுமே தெரியாது. ஆனால், இன்னும் ஒருவருடத்தில் — ஏன், ஒரு நாளிலேயே இத்தனையும் கற்றுக் கொள்ளமுடியும், உதாரணம் பாரேன்!



## அமுத வாக்கு

சகல மனிதரும் சகோதரர், மனித வர்க்கம் ஒருயிர். இப்படியிருக்க நாம் ஒரு வீட்டுக்குள்ளே மூடத்தனமான ஆசாரச் சுவர்கள் கட்டி, நான் வேறு ஜாதி, அவன் வேறு ஜாதி என்பது சுத்த மடமை என்பதைக் காட்டும்.



பள்ளிக்கூடத்திலிருந்து நீ மத்தியான சாப்பாட்டிற்கு வீட்டுக்கு வருகிறாய்! அப்போது, அம்மா உனக்குச் சாதம் போடாமல் அழுது கொண்டிருக்கிறாள். உனக்கு ஒன்றுமே புரியவில்லை, அவளருகில் ஓடுகிறாய், அன்பாகக் கட்டியணைத்துக்கொள்கிறாய்! "அம்மா—அம்மா! ஏனம்மா அழுகிறாய்? என்னம்மா நடந்தது? சொல்லம்மா! சொல்லாவிட்டால் நானும் அழுவேன்!" என்று நீயும் தேம்புகிறாய்!

அம்மா தன் கன்னத்தைக் காட்டுகிறாள். அதில் ஐந்து விரல்கள் தடித்து இருக்கின்றன. சழுத்துக்கு வைரமாலை கேட்டதாகவும், அப்பா அதனால் கோபங் கொண்டு தன்னை அடித்துவிட்டதாகவும் சொல்லி மேலும் அழுகிறாள்!

அதை கண்ட உன் மனதில் ஒரே எண்ணம் தான் தோன்றும் கோபத்தைக்காட்ட வேண்டுமென்றால் அடிக்கவேண்டும். அம்மா பலவீனமானவள்! அப்பா பலமுள்ளவர். அதனால் அவருக்குக் கோபம் வந்தது, அடித்து விட்டார்!

சாப்பிட்டுவிட்டு பள்ளிக்கூடம் போகிறாய்! தம்பி உன்னிடம் ஓடிவருகிறான், "அக்கா அக்கா! எனக்குப் பொம்மை வாங்கித்தா!" என்று அழுகிறான் தம்பி, 'அடம்' பிடிக்கிறான்!

உன்னிடமோ காசு இல்லை! சொல்லி சொல்லிப் பார்க்கிறாய் தம்பி கேட்கவில்லை. உனக்கும் கோபம் வந்து விடுகிறது. என்ன செய்கிறாய்? அப்பா, அம்மாவை அடித்தது நினைவுக்கு வருகிறது. நீயும் தம்பியை அடித்துவிடுகிறாய்! இப்படிக் கோபம் கொள்வதற்கும், அடிப்பதற்கும் யாரிடமிருந்து கற்றுக் கொள்ளுகிறாய்? அப்பாவிடமிருந்து! இல்லையா?

மாலையில் வீடு திரும்புகிறாய்! அம்மாவின் கண்களில் கண்ணீர்

(8-ம் பக்கம் பார்க்க)

# சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஏடு 24] 15-2-59 [வாரம் 10


# தமிழும்–தறியும்

அகில இந்திய கைத்தறி வாரவிழா நாடெங்கும் கொண்டாடப்பட்டு வருகிறது. கைத்தறி ஆடைகளையே மக்கள் உபயோகிக்க வேண்டுமென்று பொது மக்களைக் கேட்டுக் கொண்டும், கைத்தறி ஆடையின் தரம் உயர வேண்டும் என்று தறிகாரர்களைக் கேட்டுக் கொண்டும் நல்லவை புகன்றனர் நல்லோர் பலர்.

தமிழ் நாட்டைப் பொறுத்த வரை, தறியும்–தமிழும் ஒற்றுமைச் சின்னமாக விளங்குகிறது. தமிழ் மொழியின் மீது அரசியல் கட்சிகள் அனைத்தும் பற்றுதல்கொண்டு தமிழ் வளர பணிபுரிகின்றன. அரசியலாரும் ஆட்சிமொழி அந்தஸ்து தந்து, தமிழ் வளர்க்க மானியம் ஈந்து, கற்றோரை நாடி, உற்றது கேட்க குழு வமைத்து தக்கது செய்து வருகிறது.

தறி விஷயமும் அப்படித்தான். அரசியல் கட்சிகள் அனைத்தின் ஆதரவு பெற்றது கைத்தறி. கைத்தறி ஆடை வளர்ச்சிக்கு உதவ தங்கள் உழைப்பையும் எல்லாக் கட்சிகளும் தருகின்றன. அரசாங்கம் பல சலுகைகள் தந்தும், மானியம் உதவியும் கைத்தறி ஆடையின் வளர்ச்சிக்கு பெருந்துணை செய்து வருகிறது.

மக்களின் மானத்தைக் காப்பது கைத்தறி ஆடை. மனத்தைக் காப்பது தமிழ் நூல். இந்த இரு நூலாசிரியர்களும் வறுமையில் வாடுகிறார்கள். பட்டினியால் பரதவிக்கிறார்கள். தறி பிடித்தவனையும்–தமிழ் படித்தவனையும் தரித்திரம் பற்றிவிட்டது. இது ஒரு சாபத்தீடு என்று இது வரை இருந்து வந்த நிலை இனியில்லை. மக்கள் மனதிலே ஒரு விழிப்பு ஏற்பட்டு பழிதுடைக்க முன் வந்து விட்டனர்.

தமிழ் நூலிலும்–தறி நூலிலும், தரம் உயர வேண்டும் என்று தக்கவர்கள் சொல்லுகிறார்கள். தரக்குறைவினால், மக்களிடையே தோன்றியுள்ள விழிப்புணர்ச்சி குறைந்துவிடும் என்று உண்மையாகப் பயப்படுகிறார்கள். நல்ல சமயத்தில் தகுந்த எச்சரிக்கை செய்து தவறுதலை திருத்த முன்வந்திருக்கிறார்கள். நாட்டின் மீதும்–தமிழ் மீதும், தறி மீதும் பற்றுதல் உள்ள நல்லவர்கள்.

தரித்திரத்தை ஈடுகாட்டி தரம் குறைப்பது சரியல்ல. தரத்தை உயர்வுடையதாக்கி, அதனால் தரித்திரமே வந்தாலும் எதிர்த்து நின்று வாழ்வதுதான் மனிதப்பண்பு. தரம் உயர்ந்தால் தரித்திரம் தானாகப் போய்விடும் என்பது உறுதி.

தமிழ்ப் பெருமக்கள் தமிழ் மொழிக்குத் தரும் பேராதரவையும் ஆர்வத்தையும்போல, கைத்தறிக்கும் தர வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம். தரம் உயர்வினால் சற்று விலை உயர்வானால் கூட அதனைத் தர முன் வருவதின் மூலம் தமிழின் தரத்தையும்–கைத்தறியின் தரத்தையும் உயர்த்திவிட முடியும்.

தமிழில் பேசுவது அவமானம் என்ற நிலை தகர்ந்து, தமிழில் பேசுவதுதான் கௌரவம் என்ற நிலை வந்து கொண்டிருக்கிறது. இதைப்போல கைத்தறி ஆடை, ஏழை எளியவர்களின் ஆடை என்ற மனோபாவம் நீங்கி கைத்தறி ஆடை உடுத்துவதுதான் கௌரவம் என்ற நிலை பணம் படைத்தவர்களிடம் ஏற்பட வேண்டிய காலம் வந்துகொண்டிருக்கிறது.

தமிழும்–தறியும்–வரப்பும் உயர்ந்து தமிழகத்தின் மாண்புக்கு மதிப்புயர்வதோடு, இந்த மண் பெற்ற பாக்கியத்தை நாமும் பெறுவோம். வாழ்க தமிழ், வளர்க கைத்தறி, ஓங்குக வரப்பு. உயர்வோம் நாமே.

# காங்கிரசின் புதிய தலைவர்

காங்கிரஸ் தலைமைப் பதவியிலிருந்து விலகும் திரு. தேபரிடமிருந்து திருமதி இந்திரா காந்தி அப்பொறுப்பை ஏற்றுக்கொண்டதையொட்டி அ. இ. கா. கமிட்டி காரியாலயத்தில் விசேஷ வைபவம் நடந்தது. பிரதமர் நேரு, மத்திய மந்திரிகள், எம். பி. க்கள் உட்பட பல பிரமுகர்கள் அக்கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

திருமதி இந்திரா காந்தியிடம் கதர் நூல் மாலை ஒன்றை திரு. தேபர் கொடுத்து அதுதான் பக்திக்கும், பலத்திற்கும் ஒரு சின்னம் என்று கூறினார்.

அ. இ. கா. கமிட்டி காரியாலயத்தின் பெண் ஊழியர்களில் சிலர் தாகூரின் கவிதையொன்றைப் பாடிய பிறகு திரு. தேபர் பேசுகையில் திருமதி காந்தி காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதன் காரணங்களை விளக்கினார். கடந்த வருடம் ஆகஸ்டு முதலே புதுத் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று தாம் நேருவிடம் கூறி வந்துள்ளதாகவும் இளம் சந்ததியினர்களுக்கு தலைமைப் பொறுப்பை அளிக்கும் அவசியத்தை வற்புறுத்தி தாம் அவருக்கு கடிதம் எழுதியதாகவும் கூறினார்.

பண்டிட் பந்த் பேசுகையில் திருமதி காந்தி புரட்சி ஏற்பட்ட காலத்தில் பிறந்தவர் என்றும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள பெரும் பொறுப்புகளை நிறைவேற்றும் திறமை அவருக்கு இருப்பதாகவும் கூறினார்.

புது காங்கிரஸ் தலைவர் திருமதி இந்திரா காந்தியையும் இப்பதவியிலிருந்து விலகும் திரு தேபரையும் நேரு காங்கிரஸ் பார்லிமெண்ட் கட்சிக் கூட்டத்தில் பேசுகையில் வெகுவாகப் புகழ்ந்தார்.

காங்கிரசுக்கும் நாட்டுக்கும் திரு தேபர் செய்துள்ள தன்னலமற்ற சேவைகளை வெகுவாகப் பாராட்டி கட்சி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது.

திருமதி இந்திரா என் புதல்வி என்று கூறத் தேவையில்லை. அவரிடம் எனக்கு அபார அன்பு உண்டென்பதும் உங்களுக்குத் தெரியும். அவருடைய நற்பண்புகள், உற்சாகத்துடன் வேலை செய்யும் திறன், யோக்கியத் தன்மை, இவற்றைக் கண்டு நான் பெருமைகொள்கிறேன். என்னிடமிருந்து அவர் என்ன கற்றுக்கொண்டார் என்று எனக்குத் தெரியாது. இந்த நற்பண்புகளை அவர் தன் தாயாரிடமிருந்து பெற்றிருக்கலாம்.

திருமதி காந்தி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதால் தேசிய விவகாரங்களில் தாங்கள் செய்ய வேண்டிய பெரும் வேலை காத்துக் கொண்டிருக்கிறது என்ற மனோபாவம் பெண்களுக்கு ஏற்படும் என்று நம்புகிறேன்.

# கைத்தறியின் எதிர்காலம்

— திரு எம். சோமப்பா

கைத்தறித் தொழிலானது, ஆதிகாலம் முதல் 19-வது நூற்றாண்டின் ஆரம்பம் வரையில், இந்தியாவில் மிகவும் செழித்தோங்கி வளர்ந்திருந்த ஒரு தொழிலாகும். உலகத்தின் ஜவுளி வர்த்தகத்தில் அது ஈடு இணையற்ற ஆதிக்கம் பெற்று விளங்கியது. கைத்தறிச் சரக்குகள் நமது தேசத்தின் துணித் தேவைகளைப் பூர்த்தி செய்ததோடு மட்டுமின்றி, முதலாவது வெளிநாட்டு ஏற்றுமதிப் பொருளாகவும் விளங்கி நாட்டுக்குச் செல்வத்தைத் தேடித்தந்தது.

வெளிநாடுகளிலும் உள்நாட்டிலும் ஜவுளி ஆலைகள் ஆரம்பிக்கப்பட்டதன் காரணமாய் கைத்தறித் தொழில் மிகவும் கடுமையாகப் பாதிக்கப்பட்டது. இதில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சம் என்னவென்றால், ஒரு நூற்றாண்டு காலமாக யந்திர ரீதியான ஆலைகளின் கடுமையான போட்டி இருந்து வந்துங்கூட, கைத்தறித் தொழில் இன்னும் நிலைத்து இருந்து வருகிறது என்பதுதான். அதன் இயல்பான வலிமைக்கு இது ஒரு பிரத்யட்ச எடுத்துக்காட்டாகும்.

இன்றுங்கூட, விவசாயத்துக்கு அடுத்த ஸ்தானத்தை வகித்து வருகிற மிகப் பெரிய குடிசைத் தொழில் கைத்தறித் தொழில்தான் என்பது குறிப்பிடத்தக்கது; இது நாட்டுப்புறங்களிலுள்ள இரண்டுகோடி மக்களுக்கு ஜீவியம் அளித்துவருகிறது. அது நாட்டின் துணித் தேவைகளில் மூன்றில் ஒரு பகுதியைப் பூர்த்தி செய்து வருகிறது; நாட்டின் கிராமாந்தரப் பொருளாதாரத்தில் அது ஒரு ஜீவாதாரப் பணியாற்றி வருகிறது.

நாட்டின் மொத்தமான பொருளாதார அபிவிருத்திக்கு அடிப்படைத் தொழில்களும் கனரகத் தொழில்களும் அபிவிருத்தி செய்யப்படவேண்டியது அவசியம்தான்; ஆனால், கைவேலைத் தொழில்களுக்கும் குடும்பத் தொழில்களுக்கும் பாதகம் ஏற்படக்கூடிய முறையில் அவை அபிவிருத்தி செய்யப்படலாகாது. வேலையின்மைப் பிரச்னை தாண்டவமாடுகிற, முக்கியமாய் கிராமங்கள் நிறைந்த, நமது பரந்த நாட்டில் கைவேலைத் தொழில்களிலும் குடும்பத் தொழில்களிலும் வேலைவாய்ப்புத் தோதுக்கள் எவ்வளவோ இருக்கின்றன; அத்தொழில்கள் நம் நாட்டில் குறிப்பிடத்தக்கதொரு ஸ்தானமும் பெற்று விளங்குகின்றன. அத்தொழில்களுக்கு அன்னியச் செலாவணி எதுவும் தேவையில்லை; அதற்கு மாறாக, அவை அன்னியச் செலாவணியைச் சம்பாதித்துக் கொடுக்கும் சக்தி வாய்ந்தவை.

மற்றொரு தொழிலைப் பாதிக்கக்கூடியமுறையில் ஒரு தொழிலை அபிவிருத்தி செய்வது நல்ல முன்னேற்றத்திற்கு அறிகுறியாக இருக்கமுடியாது. அதுவும், பரந்த வேலைவாய்ப்புக்குச் சிறந்த தோது உள்ள ஒரு தொழில் அந்த நிலைமைக்கு உள்ளாக்கப்படுவது மிகவும் பொருத்தமற்ற செய்கையாகும். கைவேலைத் தொழில்கள், குடும்பத் தொழில்கள் ஆகியவைகளின்கீழ் பிரதானமாய் கைத்தறித் தொழில், கதர்–கிராமத் தொழில்கள், கைவேலைத் தொழில் ஆகியவை அடங்கியுள்ளன. அத்தொழில்கள், இந்திய சர்க்காரினால் ஏற்படுத்தப்பட்டுள்ள அந்தந்த போர்டுகளின் மேற்பார்வை உதவியின் கீழ், கணிசமாக முன்னேற்றமடைந்துவிட்டிருக்கின்றன. அவைகளின் முன்னேற்றத்துக்கு இடையூறு விளைவிப்பது ஒரு பின்னடைவு நடவடிக்கையேயாகும்.

கைத்தறித் துணியின் விற்பனை மீது கழிவுத் தொகை (ரிபேட்) வழங்குவதற்கான, திட்டம், கைத்தறி நெசவாளி தாம் வாங்குகிற நூலுக்கு, ஆலைகள் வாங்குகிற நூலின் விலை விகிதத்துடன் ஒப்பிடும்போது, அதிகப்படியாக விலை கொடுக்க வேண்டியிருக்கிற நிலைமையைச் சரிக்கட்டுவதற்காக உருவாக்கப்பட்டது. பிறகு, 1956-ல் ஆலைத் துணி மீது விதிக்கப்பட்ட எக்சைஸ் தீர்வைகள் படிப்படியாக அதிகரிக்கப்பட்டன. ரிபேட் வழங்குவதன் நோக்கம் நூல் விலையில் உள்ள (கைத்தறிகளுக்கும் ஆலைகளுக்கும் இடையே) தாரதம்மியத்தைக் குறைப்பதே ஆனபடியால், கைத்தறித் தொழிலின் பிரதிநிதிகள், ஆலைத்துணிமீது எக்சைஸ் தீர்வை படிப்படியாக அதிகரிக்கப்பட்டதனால் நிலைமை சரிக்கட்டப்பட்டு விட்டதை முன்னிட்டு, கைத்தறித் துணியின் விற்பனை மீதான ரிபேட்டைப் படிப்படியாகக் குறைத்துக்கொள்ள, 1957-ல் நடைபெற்ற கைத்தறி போர்டுக் கூட்டமொன்றில் ஒப்புக்கொண்டார்கள்.

ஆனால், 1957 கடைசி வாக்கிலும், 1958-ம் வருஷத்திலும் ஆலைத் துணிகளின் மீதான எக்சைஸ் தீர்வைகள் குறைக்கப்பட்டன. அதன் பலனாக, கைத்தறித் தொழிலின் நிலைமையானது, ரிபேட் வழங்கும் முறை அமுலுக்குக் கொண்டு வரப்பட்டபோது எந்த நிலைமையில் இருந்ததோ அதே பழைய நிலைமைக்கு வந்துவிட்டது. கைத்தறி ரிபேட்டையே நம்பியிருக்கவும் இல்லை. அதன் பொருள்களுக்குப் பாதுகாப்பளிக்கப்பட்ட மார்க்கெட் வசதிக்கு வகை செய்யப்பட்டால் ரிபேட் முறையை விட்டுக்கொடுக்கவும் அது தயாராக இருக்கிறது.

பாக்கிஸ்தான், பர்மா, இந்தோனேஷியா ஆகிய நாடுகள் இந்தியக் கைத்தறிச் சரக்குகளுக்குப் பரம்பரை மார்க்கெட்டுகளாக இருந்து வந்தன. உள்நாட்டுக் கைத்தறித் தொழில்களின் நலன்களைப் பாதுகாப்பளிப்பதற்காக அந்நாடுகள் இந்தியக் கைத்தறிச் சரக்குகளுக்குத் தடை விதித்துவிட்டபடியால், அந்த மார்க்கெட்டுகளை நாம் இழந்துவிட்டோம். அதையடுத்து இப்போது இலங்கையும் கைத்தறித் துணிகளின் இறக்குமதிகள் மீதான கட்டுப்பாடுகளைப் படிப்படியாக அதிகப்படுத்தி வருகிறது. இதன் விளைவாக, இந்தியக் கைத்தறித் தொழில் உள்நாட்டு மார்க்கெட்டிலேயே பெரிதும் கவனம் செலுத்தவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டிருக்கிறது. கைத்தறித் தொழிலுக்கு நிச்சயமான மார்க்கெட் கிடைக்கும்படி செய்வதற்கு வசதியாக, நாட்டுக்குள்ளேயே பாதுகாப்பளிக்கப்பட்ட மார்க்கெட் வசதியை ஏற்படுத்திக் கொடுத்து அதற்குப் பாதுகாப்பு அளிக்கப்படவேண்டியது அவசியமாகும்.

கைத்தறித் தொழிலுக்கு அளிக்கப்படுகிற மிகவும் குறிப்பிடத்தக்க உதவிகளில் ஒன்றாக, கைத்தறித்தொழிலின் ஸ்தாபனத்தின் மீதும் முக்கியத்துவத்தின்மீதும் பொது மக்களின் கவனத்தைக் கவர்வதற்காக ஆண்டுதோறும் கைத்தறி வாரம் கொண்டாடப்பட்டு வருகிறது. நமது தேசீயத் தலைவர்கள் அக்கொண்டாட்டங்களில் பங்கெடுத்துக்கொள்வதும், கைத்தறிச் சரக்குகளை வாங்கும்படி பொது மக்களை அவர்கள் வேண்டிக்கொள்வதும் கைத்தறித் தொழிலுக்கு மிகப் பெரிய உதவியாக இருந்து வருகின்றன. சர்க்காரிடமிருந்து எவ்வளவு உதவி கிடைத்துவந்தபோதிலும், இறுதியாகப் பொது மக்களின் ஆதரவைப் பொறுத்துத்தான் அத்தொழிலின் எதிர்காலம் அமைந்திருக்கிறது. ஒவ்வொருவருடைய தேவைக்கும் பொருளாதார நிலைமைக்கும் ஏற்றபடி கைத்தறிகள் எல்லாவிதமான ரகங்களையும் உற்பத்தி செய்து வருகின்றன. இந்தச் சந்தர்ப்பத்தில், நேர்த்தியானதும், மலிவானதும், உறுதியானதுமான கைத்தறி ஜவுளிகளை வாங்கி தொடர்ந்து அதற்கு ஆதரவளிக்க வேண்டும்.

## நிலச் சீர்திருத்தம் பற்றிய தீர்மானம்.

———

பார்லிமெண்டின் பட்ஜெட் கூட்டத்தின் போது நடக்கும் பார்லிமெண்டரி காங்கிரஸ் கட்சிக் கூட்டங்களில் நாகபுரி நிலச் சீர்திருத்தத் திட்டத்தை பற்றி விவாதங்கள் நடக்குமென எதிர்பார்க்கப்படுகிறது.

மேற்படி தீர்மானத்திற்கு திரு. என். ஜி. ரங்கா போன்றவர்களிடமிருந்து எதிர்ப்பு கிளம்பியுள்ளதைப் பற்றியும் விவாதிக்கப்படும். இந்த விஷயத்தில் தன்னிச்சையாக கருத்துக்களைத் தெரிவிக்க உறுப்பினர்களுக்கு சுதந்திரம் அளிக்கவேண்டும் என்று திரு. ரங்கா நேருவுக்கு ஒரு கடிதம் எழுதிக் கேட்டுள்ளார்.

(5-ம் பக்கத்தொடர்ச்சி)

இல்லை. மாறாக, கண்களுக்கு மேலே கண்மை தீட்டப்பட்டிருக்கிறது. முகத்தில் வழிந்த கண்ணீரின் கோடு காணப்படவில்லை, மாறாக, பவுடர் ஒளி பளபளக்கிறது. கலைந்து கிடந்த தலையை வாரிப்பின்னி, இரண்டு முழ மல்லிகைப்பூவை அவள் தலையில் வைத்துக்கொண்டு, சிரித்த முகத்துடன் அவள் அப்பாவுடன் எங்கோ கிளம்பிக்கொண்டிருக்கிறாள்!

பகலில் அழுத அம்மா மாலையில் எப்படி இவ்வளவு களிப்பாக இருக்கமுடிகிறது? ஆச்சரியத்தோடு உனது மனம் கேட்கிறது, இந்தக்கேள்வியை! அவள் கழுத்தைப் பார்த்தபோது விடையும் கிடைத்துவிடுகிறது, கழுத்தில் காணப்படுகிறது, வைரமாலை!

"சரிதான்! அம்மா அடம் பிடித்து அழுது இருக்கிறாள்!

அப்பா 'மசிந்து' விட்டார். மாலை வாங்கிக்கொடுத்துவிட்டார். "அடம்பிடித்தால் ஆகாததும் உண்டோ?" என்ற எண்ணம் உனக்கு ஏற்படுகிறது. 'அடம்' பிடித்துக் காரியம் சாதிக்கக் கற்றுக்கொண்டு விடுகிறாய்!

அப்பாவும், அம்மாவும் வெளிக்கிளம்பத் தயாராகிவிடுகிறார்கள். "அம்மா—அம்மா, எங்கே போகிறாய்?" என்று கேட்கிறாய் நீ!

"எங்கேயும் இல்லை, கண்ணம்மா! பக்கத்து தெரு கோவிலில் இன்று பூஜை. இன்று வெள்ளிக்கிழமை யல்லவா? சுவாமி கும்பிட்டு விட்டு வருகிறேன்" என்று கூறுகிறாள். "சரியம்மா, போய்விட்டு வா!" என்று விடை கொடுத்து அனுப்புகிறாய்!

சிறிது நேரத்தில் தம்பி அங்கு வருகிறான்! அம்மாவிடம் தன்னைக் கூட்டிச்கொண்டு போய்விடுமாறு உன்னைத்தொந்திரவு செய்கிறான். நீ அவனுக்குப் புத்திமதி சொல்லுகிறாய்! அவன் ஓயவில்லை. அதனால், தம்பியை அழைத்துக்கொண்டு ஓடுகிறாய், கோவிலுக்குச் செல்வதாகச் சொல்லிச் சென்ற அப்பாவும், அம்மாவும் ஒரு திரைப்படக் கொட்டகையில் நுழைவதைக் காணுகிறாய்! அப்போது உன்னுடைய மனம் என்ன பாடுபடும்?

அம்மாவும் அப்பாவும் பொய் சொல்லி "சினிமா"வுக்குச் சென்றது உன்மனதில் பதிந்துவிடும். நாமும் பொய் சொன்னால் பாதகமில்லை என்ற முடிவுக்கு வந்துவிடுவாய்!

இப்படி, பெற்றோரின் தவறுதலான ஒரு நாள் நடவடிக்கையால் நீ அடம் பிடிக்கவும், கோபம் கொள்ளவும், பொய் சொல்லவும் கற்றுக்கொண்டு விடுகிறாய்!

இது போன்ற எத்தனையோ உதாரணங்களைக் கூறமுடியும் உன்னுடைய உறவினர்கள் மற்றவரை எப்போதாவது ஏமாற்றுவது கண்டால் உனக்கும் அந்த குணம் ஒட்டிக்கொண்டுவிடும்...!

பாப்பா உலகந் தெரியாத உனக்கு பிறந்தவுடன் அப்பாவைக் கூட புரிந்துகொள்ள முடியாத உனக்கு அம்மாதான் உலகத்தை அறிமுகப்படுத்துகிறாள்! அப்பாவும், உன்னிடம் அதிகமான அன்பு செலுத்துவதால் இருவரையும் நீ நேசிக்க ஆரம்பித்துவிடுகிறாய்!

"தாயைப்போல பிள்ளை நூலைப்போல சேலை" என்றும் "அப்பாவுக்குப் பிள்ளை தப்பாமல் இருக்கிறது" என்றும் தமிழில் உள்ள பழமொழிகள் உனக்குத் தெரியுமல்லவா? எந்த விதமான தீய குணங்களும் அறியாத உன் மனதில் பெற்றோரின் குணங்கள் தான் முதலில் தெரிகின்றன. அதே தொட்டில் பழக்கம்தான் சுடுகாடு மட்டும் என்ற அளவு விரிந்துவிடுகிறது.

பெரும்பாலான பெற்றோர்கள் இதை உணருவதில்லை. தாங்கள் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக்கொள்வதோடு தங்கள் குழந்தைகளையும் கவனிக்காமல் பட்டினிபோட்டு விடுகிறார்கள்! இதே குணம் குழந்தைகள் மனதில் இடம் பெற்றுவிட்டால் அப்புறம் அவர்களை எப்படி மாற்ற முடியும்? பிரம்பால் அடித்தால்—கன்னத்தில் திருகினால் மாற்றிவிட முடியுமா?

வயலை உழுவதற்கு முன் உரம் போடுவது அவசியமா? இல்லை! அறுவடைகாலத்தில் உரம் போடுவது தேவையா? அதேபோன்றுதான் பிஞ்சு உள்ளத்திலேயே நல்ல கருத்துக்களை விதைக்க வேண்டும்.

பாலில் தண்ணீரும், பருப்பில் மண்ணும், வாங்கியகடனைக்கொடுக்காமல் ஏமாற்றுவதுமான செயல்களைக் கண்டால் குழந்தை உள்ளமும் கெட்டுவிடும் என்பதை யாரே மறுக்கமுடியும்.

சில தாய்மார்கள் இருக்கிறார்கள், குழந்தை குற்றம் செய்தால் அடிக்கிறார்கள். அத்தோடு நின்றுவிட்டால் பரவாயில்லையே! நாசமாகப்போ! உன்னைக் கொண்டு குழியிலே போட!" என்று கோபத்தில் திட்டுகிறார்கள். அதே குழந்தை ஏதாவது சிறு காய்ச்சலில் படுத்துவிட்டால் அந்தத்தாய் எவ்வளவு அழுவாள் தெரியுமா? அப்பப்பா!

அன்னையும் பிதாவும் அறிவு புகட்டும் ஆசிரியர்களும் அதிக மனம் நொந்து பேசும் பேச்சுக்கள் பலித்துவிடும் என்பது அறிஞர்கள் கருத்து, அதனால், பெற்றோர், பெரியோர் மனம் கோணாமல் நீ நடந்துகொள்ள வேண்டும். சில தாய்மார்கள் குழந்தைகளைக் கோபத்தில் இப்படியும் திட்டுவார்கள். "அரசாளுவே! ஒதை வேணுமா ஒனக்கு!" இதற்குப் பொருள் என்ன தெரியுமா? "நீ அரசு ஆளப் போகிறாய்! உனக்கு அடி கொடுக்க வேண்டுமா என்பது! தாய் சொல்லவந்த வார்த்தை: அரசு அழிவாய் என்பது! ஆனால் எப்படி மாறிவிட்டது பார்த்தாயா? ஆகையால் பெற்றோர்கள் கோபத்தில் குழந்தைகளைத் திட்டக்கூடாது. அந்தக் கோபம் குழந்தைகள் உள்ளத்தில் ஒட்டிக்கொள்ளும், அப்புறம், அந்தத் திட்டிய பெரியவர்கள் முயன்றாலும், குழந்தைகள் உள்ளத்தில் இடம் பெற்றுவிடும் கோபத்தை மாற்றிவிடமுடியாது.

குழந்தைகள் உடல் நலத்தை எல்லா பெற்றோரும் பெரிதும் விரும்புவார்கள். தங்கள் சக்திக்கு—வசதிக்கு ஏற்றவாறு சாப்பிடுவதற்கு வாங்கிக் கொடுத்து, நல்ல முறையில் வளர்க்க முயற்சி செய்வார்கள். ஆனால், குழந்தைகளின் அறிவு வளர்ச்சியில் பெற்றோர்கள் இன்னும் போதிய அளவு கவனம் செலுத்த வில்லை என்றே நான் கூறுவேன்!

அறிவைக் கெடுத்து ஒழுக்கத்தை அழித்து, வியாபார நோக்கத்தில் சில பத்திரிகைகள் நாட்டில் வளர்ச்சி பெற்று

(11-ம் பக்கம் பார்க்க)

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

இடைவிடாமல் அபிவிருத்தி செய்யப்பட்டுவருகிறது. இதற்காக வெளிநாட்டு உதவி பெருமளவில் உபயோகித்துக் கொள்ளப்படுகிறது. பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யா, இன்னும் பல நாடுகள் ஆகியவை நேரடியாகவோ அல்லது யுனெஸ்கோ மூலமோ, அல்லது வேறு எந்தவிதமான தொழில்நுட்ப திட்டங்கள் மூலமோ நமக்குத் தாராளமாக உதவி அளித்திருக்கின்றன. அந்த உதவியில் ஓரளவு இந்தியாவிலும் மீதி வெளியிலும் உபயோகிக்கப்படுகிறது.

திறமையுள்ள ஒரு எஞ்சினீயரைத் தயாரிப்பதற்கு குறைந்தபட்சம் நான்கு அல்லது ஐந்து வருஷம் ஆகும்; முழுக்க அபிவிருத்தியடைந்த தொழில் நுட்ப நிலையமொன்றை ஏற்படுத்த இதைவிட அதிக காலம் பிடிக்கும்.

சர்க்கார், ஸ்தாபிதமான தொழில்துறை, கல்வி நிலையங்கள் ஆகியவை எல்லாம் இது விஷயத்தில் ஒத்துழைக்கவேண்டும். ஆனால் இத்துறையில் சப்ளை தேவை ஆகியவைகளிடையே ஒரு சம நிலையை அடைவது சாத்தியமல்ல: அது உசிதமுமல்ல என்று சொல்லலாம். தீவிர இயக்க பொருளாதாரத்தில் தேவையின் தன்மை இடைவிடாது மாறிக்கொண்டே இருக்கும்; வேலை நுட்ப அபிவிருத்தி, பொருள் அபிவிருத்தி ஆகியவைகளை அடையும் வகையில் மாறுதல் ஏற்பட்டுவரும். புதிய மூலப் பொருள்கள், புதிய கருவிகள், புதிய வேலை நுட்பங்கள், விஞ்ஞான தொழில்நுட்ப துறைகளில் புதிய கண்டுபிடிப்புகள், புதிய தொழில்கள் ஆகியவைகளுக்கு அவ்வப்போது பல்வேறு விதமான பயிற்சி பெற்றவர்கள், பல்வேறு விகிதாசாரங்களில் தேவைப்பட்டு வருவார்கள். ஆனால், நாம் நெடுந்தூர திருஷ்டியுடன் திட்டமிட முனைய வேண்டும்; ஏற்படுகிற மாறுதல்களால் நாம் ஏமாந்து பின்தங்கிவிடுகிற நிலைமை தோன்றிவிடக்கூடாது.

# பராமரிப்பு வாழ்வளிப்பு

மாதர்கள், குழந்தைகள் ஆகியோரை ஒழுக்கக் கேடான காரியங்களில் ஈடுபடுத்துவதைத் தடுப்பதற்கான சட்டம், சில மாதங்களுக்கு முன்பாக அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருப்பது, அச்சட்டத்தின் அமுல் காரணமாக விபசார விடுதிகளைவிட்டு வெளியேறும் கட்டாயம் ஏற்பட்டுள்ள மாதர்களுக்கு மாற்று ஜீவனோபாயத்துக்கும் மாற்று இருப்பிட வசதிக்கும் வகை செய்வது சம்பந்தப்பட்ட உடனடிப் பிரச்னையை முன்னணிக்குக் கொண்டு வந்திருக்கிறது. மற்றும் அவர்களுடைய சமூக–பொருளாதார புனர்வாழ்வளிப்புக்காக நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியதற்கான உடனடி அவசியத்தின் முக்கியத்தையும் அது வெளிப்படுத்தியுள்ளது. இப்பிரச்னைக்கு தீர்வு காணுவதற்காக மத்திய சமூக க்ஷேமநல போர்டின் மீட்பு பிற்கால பராமரிப்புத் திட்டத்தின் கீழ் ஏற்படுத்தப்பட்டுவரும் ராஜ்ய விடுதிகள் இத்துறையில் உபயோகமான சேவையைப் புரிந்து வருகின்றன. இத்திட்டம் மத்திய உள்விவகார, வர்த்தக–தொழிலியல், சுகாதார மந்திராலயங்கள், இதர மத்திய மந்திராலயங்கள், ராஜ்ய சர்க்கார்கள் ஆகியோரின் ஒத்துழைப்புடன் நிறைவேற்றப்பட்டுவருகிறது.

இந்தத் திட்டம், விபசாரவிடுதிகளிலிருந்து வெளியேறிச் செல்லும், மாதர்கள், ஒழுக்கக் கேட்டில் ஈடுபடும் ஆபத்திலிருந்து மீட்கப்பட்ட மாதர்கள் ஆகியோரின் நலனுக்காக மட்டிலும் ஏற்பட்டதல்ல. அதன் அனுகூலங்கள், சிறைச்சாலைகள் போன்ற குற்ற சீர்திருத்த அல்லது பராமரிப்பு நிலையங்களிலிருந்து விடுதலை பெற்ற இதர ஆண், பெண்கள், இளம் குற்றவாளிகள் சீர்திருத்த நிலையங்களிலிருந்து விடுதலைபெற்ற இளம் பருவத்தினர் ஆகியோருக்கும் கிடைக்கும். பிரஸ்தாப திட்டத்தின் கீழ் ஏற்படவிருக்கும் 80 ராஜ்ய விடுதிகளில் குறைந்தபட்சம் 30 விடுதிகள், ஒழுக்கக் கேட்டில் ஈடுபடக்கூடிய ஆபத்திலிருந்து மீட்கப்பட்ட ஸ்திரீகளுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது.

இந்தத் திட்டம் அமுல் நடத்தப்பட்டு வருகிற கடந்த இரண்டு ஆண்டு காலத்தில், அது விஷயமாக நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. நாடு முழுவதிலும் 41 ராஜ்ய விடுதிகளையும், 122 ஜில்லா நிலையங்களையும் ஆரம்பிக்க அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது. இவற்றில் பல ஏற்கெனவே இயங்க ஆரம்பித்துவிட்டன.

மத்திய சமூக க்ஷேமநல போர்டு ஆரம்பித்து நடத்தும் இதர க்ஷேமநலத் திட்டங்களில் பயன்பெற்று வருகிறவர்களின் பொருளாதாரப் புனர்வாழ்வளிப்புக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருவது போலவே, மீட்பு பிற்கால பராமரிப்புத் திட்டத்திலும், ராஜ்ய விடுதிகளில் அனுமதிக்கப்படும் ஆண்களும், பெண்களும், பொருளாதார ரீதியில் தன்னிறைவு பெறவும், சமூகத்தில் ஏற்கப்படவும் உதவியளித்து வருவதன்மூலம், அவர்களுக்கு நிரந்தரமாக புனர்வாழ்வளிப்புக்கு வகை செய்வது பற்றி வலியுறுத்தப் பட்டிருக்கிறது. இந்த லக்ஷியத்தை எய்துவதற்காக, ஒவ்வொரு ராஜ்ய விடுதியிலும் இணைந்தொரு பகுதியாக உற்பத்திப் பிரிவொன்றுக்கும் வகை செய்ய திட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. குற்றச் சீர்திருத்த நிலையங்களிலிருந்து விடுதலைபெற்று வெளிவரும் ஸ்திரீகளும், இதர நபர்களும் முதலில் ஜில்லா நிலையங்களில் அனுமதிக்கப்படுகின்றனர். ராஜ்யவிடுதிகளை அடுத்தடுத்தாற்போல இவற்றில் 330 நிலையங்களை அமைக்கத் திட்டத்தில் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இவை ஒரு இடைக்கால ஏற்பாடேயாகும். அவற்றில் அனுமதிக்கப்படுபவர்கள், அங்கு சில வார காலமே தங்குகின்றனர். அவர்கள் பின்னர் அங்கிருந்து ராஜ்ய விடுதிகளுக்கு அனுப்பப்படுகின்றனர்; அல்லது வேறு வகையில் உதவியளிக்கப்படுகின்றனர். ஒவ்வொரு ராஜ்ய விடுதியிலும் சுமார் 500 பேர் தங்கும் இட வசதியுள்ளது.

இவர்களை ஜில்லா நிலையங்களிலிருந்து ராஜ்ய விடுதிகளுக்கு அனுப்பிவரும் நோக்கம் அவர்களுடைய விடுதி வாழ்க்கையின் கால அளவை நீட்டிப்பது மட்டுமல்ல, அவர்களுக்கு ஏதேனும் ஒரு கைத்தொழிலில் பயிற்சியளிப்பதே இதன் முக்கிய நோக்கமாகும். அவர்கள் அத்தொழில்களில் போதிய அளவு திறமை பெற்ற பின்னர், அவர்கள் விடுதியைச் சேர்ந்த உற்பத்திப் பிரிவில் உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுத்

(11-ம் பக்கம் பார்க்க)

(3-ம் பக்கத்தொடர்ச்சி)

பெரிய கண்காட்சிகளிலும் வர்த்தகச் சந்தைகளிலும் அகில இந்திய கைத்தறி போர்டு பங்கெடுத்துக் கொள்கிறது. சென்ற இரண்டு வருஷ காலத்தில் அந்த போர்டு மொத்தம் 20 கண்காட்சிகளிலும் சந்தைகளிலும் பங்கெடுத்து, அந்த நாடுகளிலுள்ள மக்களிடையே இந்தியக் கைத்தறிப் பொருள்கள் விஷயத்தில் சிறந்த ஆர்வத்தை ஏற்படுத்த வழி செய்திருக்கிறது. சமீப வருஷங்களில் கைத்தறி ஜவுளிகளுக்கு கிராக்கி அதிகரித்து வந்துள்ள அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகளில் கைத்தறிப் பொருள்களுக்கான மார்க்கெட்டுகளை அபிவிருத்தி செய்வதற்கு ஒருமுகப்பட்ட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

சென்னையில் கைத்தறிப் பொருள்களுக்காக ஏற்றுமதி ஸ்தாபனமொன்றை ஏற்படுத்த போர்டு நடவடிக்கை எடுத்திருக்கிறது. அரசாங்க வர்த்தகக் கார்ப்பொரேஷனின் ஒரு அங்கமாக அது இயங்கி வரும். அது வெளிநாட்டு இறக்குமதியாளர்களுக்கு உதவியளித்து வரும். சரக்குகளை நேரடியாகக் கூட அது சப்ளை செய்யும்.

கைத்தறி ஆடைகளின் உயர் மதிப்பை மக்கள் உணரும்படி செய்வதற்காகவும், கைத்தறி நெசவாளர்கள் விஷயத்தில் மக்களின் அனுதாபத்தைத் தேடுதவற்காகவும், ஒவ்வொரு வருஷமும் "கைத்தறி வாரம்" கொண்டாடப்பட்டு வருகிறது.

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பவத்தின் பேரில் வகுக்கப்பட்ட முறை இது.

உண்மையில் இது சரித்திர பிரசித்தி பெற்ற சமுதாயச் சீர்திருத்த புதுமையாகும். சத்தியாக்கிரகம் என்பது முனிவர்களுக்கு மட்டுமல்ல; பாமர மக்களுக்கும் தான் என்று காந்திஜியே கூறினர். இது பலாத்காரமில்லாத போராட்டம். துவேஷத்தையல்ல, அன்பையே அடிப்படையாகக் கொண்டது; அதுதான் எதிரிகளை நேசிப்பதும், அவர்களது மனத்தை மாற்றுவதற்கும் தான் கஷ்டங்கள் அனுபவிப்பதுமாகும்: பாபத்திற்கும் பாபிக்குமுள்ள வித்தியாசத்தைக் காட்டுகிறது. தீமைக்கும் தீமை புரிவோருக்கும் உள்ள வேற்றுமையைச் சுட்டுகிறது. இது வீரரின் ஆயுதம்; கோழையின் ஆயுதமல்ல. ஒழுக்கக் கட்டுப்பாடு, சுயநலத் தியாகம், கஷ்டமனுபவிக்கும் பண்பு, பட்டினி, சிறைவாசம், மரணம் ஆகியவை இதற்குத் தேவை.

ஆயினும் உன்னதமான லட்சியங்களுக்கு ஏற்ப அவற்றை அடையும் முறைகளும் அமையவல்ல சிறந்த பண்பு கொண்டது சத்யாக்ரக முறை.

காந்திஜி தமக்குக் கோயில்கட்டி வைப்பதை விரும்பவில்லை. அவரை கவுரவிக்க அவர் பெயரால் மதம் ஒன்றைத் தோற்றுவிக்கக் கூறவில்லை. அவர் வேண்டியதெல்லாம், "நமது சக்திகள் அனைத்தும் உள்நாட்டிலும், உலகிலும் அமைதியும் சமாதானமும் நிலவ — நியாயமான, அகிம்சா முறைகளைக் கொண்ட சமாதானம் நிலவ, பயன்படுத்தப்பட வேண்டும் என்பதே".

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

யடைகிறேன். தேசத்தின் ஜவுளித் தொழிலில் பிரதானதொரு தொழிலாக இருந்த கைத்தறித் தொழில் ஆலை உற்பத்தியால் பின்னடைவுற நேரிட்டிருந்தது. அதனால் கைத்தறித் தொழிலில் போதிய அளவு வேலையின்மை ஏற்பட்டிருக்கிறது. ஆனால், இந்த குறைபாட்டை, போதிய அளவு வசதிகள் செய்து தருவதன் மூலமும் சலுகைகள் அளிப்பதன் மூலமும் கைத்தறித் துணிகள் தரத்தை அபிவிருத்திச் செய்வதற்கும், ஆலை உற்பத்தியுடன் போட்டியிடுவதற்கும் வழியமைத்துத் தந்து நிவர்த்திக்க முயற்சிக்கப்பட்டிருக்கிறது. இப்போது கைத்தறி உற்பத்திப் பொருள்கள் இந்நாட்டில் மாத்திரமின்றி வெளிநாடுகளிலும் விஸ்தாரமாக ஆதரவு பெற்று வருவதையறிய எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. அவைகளுக்கான கிராக்கி மேலும் அதிகரித்துக் கொண்டு வருகிறது. இத்தகைய முறையில் வருஷந்தோறும் விசேஷ வாரக்கொண்டாட்டங்கள் நடத்துவதால் தொழிலுக்குப் பெரும் ஊக்கம் கிடைக்கும்; கைத்தறிப் பொருள் நிச்சயமாய் அதிகப் பிரபலமடையும். கைத்தறித் துணிகளின் தரம் அபிவிருத்தியடைந்து, மக்களின் விருப்பத்துக்கு உகந்த முறையில் இத் தொழில் தயாரிப்பைச் செய்துவரும்போது இத் தொழிலுக்கு நிச்சயமான மார்க்கட் கிடைக்கும்.

ஆருவது அகில இந்தியக் கைத்தறி வாரம் வெற்றிகரமாக நடக்க வேண்டுமென்று நான் வேண்டுகிறேன்.

ஈ. எம். எஸ்.
நம்பூதிரிப்பாட்

இவ்வருஷம் கைத்தறி வாரம் கொண்டாடப்படுவதானது நம் நாட்டில் கைத்தறித் தொழிலைச் சீரமைப்பதற்கும் நவீனமயமாக்குவதற்குமான இயக்கத்தை மேலும் வலுப்படுத்தும் என்று நான் நம்புகிறேன்.

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

தப்படுவார்கள், அல்லது சொந்தத்தில் ஒரு தொழிலேயோ, வியாபாரத்தையோ மேற்கொள்ளுவதற்கான வழி வகையைப் பெறுவார்கள், குழந்தைகளுடன் விடுதியில் அனுமதிக்கப்படும் ஸ்திரீகள் விஷயத்தில், குழந்தைகள் ஆறு வயதிக்குக் குறைந்தவர்களாக இருந்தால் அவர்கள் விடுதியில் தங்க அனுமதிக்கப் படுகின்றனர். எனவே, மீட்பு பிற்கால பராமரிப்புக்கான நிலையம், உபயோகமான வேலையளிப்பு வாய்ப்புக்களுடன், இறுதியான பொருளாதாரப் புனர்வாழ்வு பெறுவதற்கான வசதிகளுடன்கூடிய மீட்பு பிற்கால பராமரிப்பு சேவைத் துறையில் ஒரு கூட்டு ஏற்பாடாக விளங்கும்.

மீட்கப்பட்ட மாதர்கள், இதர குற்றச் சீர்திருத்த நிலையங்கள் ஆகியவற்றிலிருந்து வெளியேறி வருபவர்கள் ஆகியோருக்கான புனர்வாழ்வளிப்பு, உற்பத்திப்பிரிவில் அவர்களுக்குப் பயிற்சியளித்து, உபயோகமான வேலையொன்றில் அவர்களை அமர்த்துவதுடன் முடிவடைவதல்ல. மத்திய சமூக க்ஷேமநல போர்டு வகுத்துள்ளபடி, மீட்பு பிற்கால பராமரிப்புத் திட்டம், இத்தகைய நபர்களின் சமூக புனர்வாழ்வளிப்புக்கும் வகை செய்கிறது. நிர்வாக பொறுப்பில் இருந்து வருகிறவர்கள், தாங்களாகவோ, தகுந்த சமூக க்ஷேமநல ஸ்தாபனங்களின் மூலமாகவோ, சமூகப் புனர்வாழ்வுபெற முயற்சி செய்யப்படுகிறது. இவர்கள் சமூகத்தில் மீண்டும் இடம் பெற்றுவர வகை செய்வதற்காக ஏற்கெனவேயுள்ள சமுதாய சேவை வசதிகளைப் பயன்படுத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

பிரஸ்தாப சட்டத்தின் கீழ் பாதுகாப்பு விடுதிகளை ஏற்படுத்தத் திட்டமுள்ளது. விபசார விடுதிகளிலிருந்து வெளியேறும் மாதர்கள் இந்த விடுதிகளில் தஞ்சமளிக்கப்பட்டு பராமரிக்கப்பட்டு வருகின்றனர். இந்த விடுதிகள், மீட்பு பிற்கால பராமரிப்பு விடுதிகளைப் போலவே கிட்டத்தட்ட அதே நோக்குடனும், லக்ஷியத்துடனும் உள்ளவையாகும். எனவே மீட்கப்பட்ட மாதர்களுக்காக முதல் திட்டத்தின் கீழ் ஏற்படுத்தப்படும் ராஜ்ய விடுதிகளை பாதுகாப்பு விடுதிகளாகப் பயன்படுத்தி வரவேண்டுமென்றும், அதற்கு ஒழுக்கக் கேடு தடுப்புச் சட்டத்தின் கீழ் மீட்கப்பட்டு, காவலில் வைக்கப்படும்மாதர்களையும், பெண்களையும் தனித்து வைப்பதற்காக அவர்களுக்காக ஒரு தனி பிரிவை அவ்விடுதியில் ஏற்படுத்துவதன் மூலம் முறையாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்க வேண்டுமென்றும் இந்திய சர்க்கார் தீர்மானித்துள்ளனர்.

ஏற்கெனவே, எடுத்துக் கூறியுள்ளபடி மீட்பு பிற்கால பராமரிப்பு விடுதி வாழ்க்கையை கால வரையறையின்றி நீடிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டவையல்ல. அவர்களின் புனர்வாழ்வளிப்பு வேலையை ஓராண்டிலிருந்து மூன்றாண்டு காலத்துக்குள்ளாகப் பூர்த்தி செய்ய முயற்சிக்கப்படுகிறது. சில சந்தர்ப்பங்களில் அது பின்னும் அதிக காலம் பிடிக்கக்கூடும். ஒவ்வொரு நபரும் கூடிய சீக்கிரத்தில் விடுதியை விட்டுச் செல்லவும், சமுதாயத்திடையே அவர்களை வசிக்கச் செய்ய ஊக்கமளிப்பதும் அதன் நோக்கமாகும். பிற்கால சர்வீஸ் ஒன்றின் மூலம் அவர்களுடன் தொடர்ந்து தொடர்பு கொள்ளப்பட்டு வருகிறது. மற்றும் விடுதியில் அனுமதிக்கப்படும் நபர்கள் பணம் சம்பாதிக்க ஆரம்பிக்கும் போது அவர்கள் விடுதியில் நீடித்து இருந்துவர தங்கள் சம்பாத்யத்தில் ஒரு பகுதியை விடுதிக்குச் செலுத்த வேண்டும் என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. உதாரணமாக மாதம் 25 ரூபாய் சம்பாத்யமுள்ளவர் அதில் மூன்றிலொரு பகுதியையும், 50 ரூபாய் சம்பாதிப்பவர் அதில் பாதியையும் செலுத்தி வரவேண்டும்.

இந்த விடுதிகளை அமைக்கும் வேலைத் திட்டத்தின் வேகம் படிப்படியாக அதிகரித்து வருகிறது. அதன் முன்னேற்றம் எதிர்பார்த்ததுபோல அவ்வளவு துரிதமாக இல்லாமலிருக்கிறதே என்று கூறும்போது அத் திட்டத்தை நிறைவேற்றி வருவதில் மத்திய, ராஜ்ய சர்க்கார்களில் உள்ள பல்வேறு ஸ்தாபனங்கள், ராஜ்ய சமூக க்ஷேமநல ஆலோசனை போர்டுகள், மற்றும் பல சுயேச்சை ஸ்தாபனங்கள் ஆகியவை ஒருமுகப் பாட்டுடன் வேலை செய்து வருவதைப் பொறுத்துள்ளது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். 1958–59-ம் ஆண்டில் பின்னும் துரிதமான கதியில் முன்னேற்றத்துக்கு வகை செய்ய ஏற்பாடாகியுள்ளது. பின்னும் புதிதாகப் பல விடுதிகளும், நிலையங்களும் ஏற்படுத்தப்படுவது மட்டிலுமின்றி, பின்னும் அதிகமான நபர்கள் திட்டத்தின் கீழ் அளிக்கப்படும் சர்வீசுகளின் அனுகூலங்களைப் பயன்படுத்தி வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

---

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

வருகின்றன. அவற்றைக் குழந்தைகள் படிக்காதவாறு பாதுகாக்க வேண்டியது பெற்றோரின் முதற் கடமை.

சிறுவயதில் படிக்கும் நீதியுள்ள கதைகளும் பாட்டுகளும் குழந்தைகளின் மனத்தை விட்டு ஒரு போதும் நீங்காது. அப்படி அறிவை வளர்க்கக்கூடிய நூல்களைத் தேடிப் பிடித்து, குழந்தைகளுக்குப் பெற்றோர்கள் நிறைய வாங்கிக் கொடுக்கவேண்டும். அதற்காக ஒரு வழி செய்யலாம்! ஒவ்வொரு குழந்தைக்கும் பத்து வயது ஆகும் வரை அதன் பெற்றோர்கள் அக்குழந்தைகளின் பிறந்த தினத்தைத் தங்களால் முடிந்த அளவு சிறப்பாகக் கொண்டாட வேண்டும். அந்தப் பிறந்த தினத்தில் குழந்தைகளுக்கு வேண்டியவர்கள், அதன் அறிவு வளர்ச்சிக்கான — ஒழுக்க உயர்வுக்கான புத்தகங்களை அன்று பரிசாகத் தரவேண்டும்! இப்படி பத்து வருஷங்கள் வரை ஒவ்வொரு ஆண்டும் செய்யலாம். இப்படி செய்வதால் வீட்டுக்கொரு நூல் நிலையம் தோன்றும், குழந்தைகளும் நல்ல முறையில் வளருவார்கள். இது பெற்றோர் அவசியம் கடைப்பிடிக்க வேண்டிய முறையாகும்.

காந்தித்தாத்தா ஒரு சமயம் தவறு செய்து விட்டார், கெட்ட நண்பர்களிடம் கொண்ட சினேகிதத்தால் தனது காப்பையே அழித்து, வீண்செலவு செய்து விட்டாராம்! பிறகு மனந்திருந்தி, தன் நண்பர்களால் காப்பைக் கழற்றி விற்று விட்டதாகவும், இப்போது தவறை உணர்வதாகவும் தன்னை மன்னிக்கவேண்டும் என்றும் ஒரு கடிதம் எழுதி, பெற்றோரிடம் கொடுத்து விட்டு தேம்பித் தேம்பி அழுதாராம்! அதன் பிறகு காந்தித் தாத்தா எந்தத் தவறும் செய்ததில்லையாம்!

அதேபோல் தான் பாப்பா, உன்னையறியாமலே நீ தவறு செய்தாலும் அம்மா அப்பாவிடமும், நண்பர்களிடமும், பெரியவர்களிடமும் தவறை உணர்ந்து சொல்லி, மன்னிப்பு கேட்டுக் கொண்டு நல்ல முறையில் நடந்து காட்டவேண்டும்.

அன்புள்ள பாப்பா, இவை தான் நான் நீ நன்றாக வாழக் கூறும் புத்திமதிகள்! உன்னைப் பற்றியும், உலகத்தைப் பற்றியும் தினமும் ஒரு கணமேனும் சிந்திக்க வேண்டும். மற்றவர்கள் மனப்பூர்வமாக மகிழ்ந்து பாராட்டுமாறு நடந்துகாட்டவேண்டும்! உன்னைப் பெற்றதனால், உன் பெற்றோர் பூரிப்புகொள்ளுமாறு வாழவேண்டும்! உனக்கு எனது மனங்கனிந்த வாழ்த்து.





# கோர்ட் விளம்பரங்கள்.

## கள்ளக்குறிச்சி டி. மு. கோ.

O. S. 314 | 58.

வாதி: முத்துப் பண்டிதர்.

பிரதிவாதிகள்: மாபூகான் சாயபு வகையரு. திருச்சி தேரடித்தெரு (1) மாபூகான் சாயபு விருத்தாஜலம் மணலூர்பேட்டை (4) வடிவேல்.

ஷை வாதி—பிரதிவாதிகள் பேரில் சொத்துக்கள் சுவாதீனத்திற்கும், மாசூலாதயத்திற்கும் தாவாசெய்து இருக்கிறபடியால் 27-2-1959-ல் 1&4 பிரதிவாதிகள் நேரிலாவது வக்கீல் மூல்யமாவது ஆஜராகி ஆட்க்ஷேபணைகள் இருந்தால் தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

S. ராமமூர்த்தி அய்யர்,
அட்வகேட்.

2/2820/261

## துறையூர் டி. மு. கோ.

O. S. 97 | 56.

வாதி: சிதம்பரம் பிள்ளை.

பிரதிவாதிகள்: அரப்புளியா பிள்ளை வகையரு.

ஷை நம்பரில் EP 411 | 58 & EA 692 | 58 எல & அனுமதி நோட்டீஸ்களையும் பிரதிவாதிக்கு ஒட்டி சார்வு செய்ய கெடு 16—2—59 எற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையை ஷை தேதியில் தெரிவித்துக் கொள்ளலாம்.

V. S. நரசிம்மய்யர்,
அட்வகேட்.

3/2821/262

## துறையூர் டி. மு. கோ.

O. S. 528 | 1958.

வாதிகள்: பழனியாண்டி பிள்ளை வகையரு.

1-3-4-5-6 பிரதிவாதிகள்: பெரியண்ண மூப்பன், கந்தசாமி, பிச்சை, கிருஷ்ணசாமி, பெரியசாமி.

வாதிகள் ஈட்டு பத்திரப்படி ரூ. 1077-50க்கு தாவா செய்து 6—3—1959 வாய்தா போடப்பட்டிருக்கிறது. ஷை பிரதிவாதிகள் அன்று ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளலாம்.

K. சிவராம கிருஷ்ணய்யர்,
வக்கீல்.

4/2822/263

## விழுப்புரம் டி. மு. கோ.

S. C. 687 | 1958.

பத்மராஜ் ஜெயின் அண் கோ மாணிக்க முதலியார்: வாதி.

வரதராஜக் கவுண்டர்: பிரதிவாதி.

பிரதிவாதி, வாதி கடையில் பைத்துவரவு, செய்த பாபத்தில் பாக்கி எற்பட்ட ரூ. 171-86 nP வுக்கு, வாதி, ஷை கோர்ட்டில் ஷை துகை வரபற்று தாவா செய்து இருக்கிறார். அது 23—2—59 தேதியில் ஷை கோர்ட்டில் ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையுள்ளவர்கள், ஷை கோர்ட்டில் அன்று காலை 11 மணிக்கு ஆஜராகி மனு கொடுத்து கொள்ளலாம். இல்லாவிடில் ஒருதலை பக்ஷமாக தீர்ப்பு செய்யப்படும் என்பதை தெரிவிக்கப்பட்டு இருக்கிறது.

R. கோபால அய்யங்கார்,
வாதிவக்கீல்.

1/2819/260

## அரியலூர் டி. மு. கோ.

O. S. No. 13 | 59

A. K. S. வெங்கடாச்சாரியார் — மனுதார்.

1. அலமேலு அம்மாள்
2. செல்லம்மாள்
3. ஆண்டாள் அம்மாள்

— எதிர்மனுதார்கள்.

ஷை நம்பரில் மனுதார் என்பவர் மனுவின் ஷீடியூலில் கண்ட கடன்களுக்கு சரிபாதி துகைக்கு தனக்கும் எதிர் மனுதார்களுக்கும் வார்சு சர்ட்டிபிகேட்டு கிடைக்க மனுக் கொடுத்து நோட்டீஸ் publicationக்கு ஆர்டராகி ஈரங்கி 12—3—59ல் வைக்கப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை கோர்ட்டில் 10 மணிக்கு ஆஜராகி ஆக்ஷேபணையை தெரிவித்துக்கொள்ளவேண்டியது.

N. V. Krishnasami Iyengar,
Advocate.

5/2823/264

## அரியலூர் டி. மு. கோ.

O. S. 434 | 58

பிச்சபிள்ளை கவுண்டர் வகைரு — வாதிகள்

சின்னபிள்ளை உடையார் — பிரதிவாதி

ஷை நம்பரில் வாதிகள், 24—3—55 தேதி புரோநோட்டுபடி ரூ, 530 கிடைக்க தாவா செய்து, ஒட்டி சர்வு செய்யவும் பிரசுரம் செய்யவும் உத்திரவாகி 26—2—59ம் தேதியில் ஈரங்கி எற்பட்டிருக்கிறது.

T. V. வெங்கட்ராமன்,
அட்வகேட்.

6 | 2824 | 265

## விழுப்புரம் டி. மு. கோ.

S. C. 407 | 58.

குப்புசாமி முதலியார் — வாதி

ராகவன் வகைரு—பிரதிவாதிகள்.

விழுப்புரம் தாலுக்கா அரியலூர் திருக்கையிலிருக்கும் தற்காலம் பெங்களூர் போயிருக்கும் தாண்டவராயன் குமாரன் ராகவன்: 1-ம் பிரதிவாதி.

ஷை வாதி அண்டிமாண்டுபடி ரூ. 402/-வரப்பற்ற உங்கள் வகைரு பேரில் ஷை கோர்ட்டில் தாவாசெய்து ஷை தாவாவானது 27—2—59 உ வாய்தா வைத்திருக்கிறது. அன்று தாங்கள் ஷை கோர்ட்டில் காலை 10 மணிக்கு ஆஜராகி உமக்குள்ள ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ள வேண்டியது தவறினால் ஒருதலை பக்ஷமாக தீர்ப்பு எற்படும் என்பதை தெரிவிக்கப்படுகிறது.

C. வீரராகவ அய்யர்,
அட்வகேட்.

7/2825/266.

## கரூர் டி. மு. கோர்ட்டு

O. S. 431 | 56

E. P. 1032 | 58

வாதி — வேலுசாமி பிள்ளை

பிரதிவாதிகள்—ராமசாமி ஆசாரியார் வகைரு

அடமான சொத்திற்கு எல இஸ்தியாரின் ஷரத்துக்களை நிஷ்கரிஷை செய்ய 19-2-59ம் தேதி வாய்தா எற்பட்டிருக்கிறது.

K. முத்துருமலிங்கம்,
அட்வகேட்.

8 | 2826 | 267



Edited Printed and Published by Thiruloka Sitharam for the Shivaji Private Limited., at S. N. Printers Tiruchy-2.